Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன்—388, 389

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA. Kanchipuram-631503.

வருடச் சந்தா 10



பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

Released by Maran's Dog ,Toronto, Canada

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1981 ரௌத்திரி ஹு மார்கழி, தை

# ஸ்ரீராமாநுஜன் - 388-389







ஆசிரியர்:
ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் P B. அண்ணங்கராசாரியர்

| | | |
|---|---|---|
| தொகுதி 33 | ரௌத்ரிஹூ மார்கழி தைமீ<br>1981 ஜனவரி மாதம் | பகுதி 8, 9 |

## ஆப்தர்களின் ஷஷ்டியப்தபூர்த்தி விழாக்கள்

ஸ்ரீ தேவப்பெருமாளுடைய பிரம்மோத்சவத்தில் அத்யாபக ஸ்வாமிகளுக்கும் மற்றவர்களுக்கும் விசேஷ ததீயாராதனை நடத்திவரும் ஸ்ரீமான் உ. வே. குன்றபாக்கம் விஞ்சிமூர் ஸ்ரீநிவாஸாசாரியாருக்கு ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் சென்னை திருவல்லிக்கேணியில் 26—9—80முதல் 1—10—80வரை திவ்வியப்ரபந்த வேதபாராயண புராண படனங்களுடன் விசேஷமாக நடந்தேறியது. பல திவ்விய தேசங்களிலிருந்தும் மாலைமரியாதை ப்ரஸாதங்கள் வந்தன. திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் கைங்கர்ய சபையின் காரியதரிசியானவிவர் 'கைங்கர்ய திலகம்' என்று விருது சூட்டப்பெற்றவர். அறுபது ஆண்டு நிறைவு விழா காணும் K. V. ஸ்ரீநிவாஸன் தம்பதிகள் பல்லாண்டு பல்லாண்டு, நீங்காத செல்வம் நிறைந்து புத்ர பௌத்ராதிகளுடன் வாழ்ந்து ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்திற்குப் பாடுபடவேண்டுமாய்ப் பெருந்தேவி நாயிகா ஸமேத பேரருளாளன் திருவடிகளில் ப்ரார்த்தித்துக் கொள்கிறேன், ... — ....

2. டெல்லியில் உயர்பதவியில் வாழும் ஸ்ரீமான் உபயவே E. வைகுண்டமயியங்காருடைய ஷஷ்டியப்த பூர்த்தி ஸமீபத்தில் மிக விமரிசையாக நடைபெற்றது. அச்சமயம் எடுத்த புகைப்படம் அடுத்த பக்கத்தில் காண்க.

பொலிக! பொலிக! பொலிக! —ஸ்ரீராமாநுஜன் கார்யதர்சி

# திருவரங்கம் பெரிய கோயிலில் திருக்கல்யாண நிகழ்ச்சிகள்

ஸ்ரீரங்கத்தில் வாழும் ஸ்ரீமதுபயவே. திருநாராயணபுரம். திருமலை அனந்தான்பிள்ளை சதாபிஷேகம், கோவிந்தநரஸிம்ஹாசாரியர் ஸ்வாமிக்கு நிகழும் தையீ ஸ்வாதீ நக்ஷத்திரத்திலும், சென்னையில் வாழும் ஸ்ரீமதுபயவே, வித்வான் வாகம்ருதவர்ஷி வேளுக்குடி ஸ்ரீ வரதாசாரியர் ஸ்வாமிக்கு அடுத்தநாள் திருவிசாகத்திலும் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம் லோகோத்தர ப்ரக்ரியையில் நடைபெற்றது, இது ஸம்பந்தமான நிகழ்ச்சி விபரங்களும் வெளியீட்டு விசேஷங்களும் தனிப்புத்தகமாக வெளிவந்திருக்கின்றன. ஷஷ்ட்யப்தபூர்த்தி வர்ண மாலா முதலிய சில ஸ்துதிகள் இப்பத்திரிகையிலேயே மேலெ வெளிவந் திருப்பது காணலாம். [ அவற்றைக்கொண்ட ஸ்ரீராமாநுஜன் வடமொழி யறிவாளிகளுக்குமட்டும் அனுப்பப்படும். அபேக்ஷிப்பவர்களும் Card எழுதிப் பெறலாம்.

# டாக்டர் பட்டம் பெற்ற பெரியார்

ப்ரவசன வாசஸ்பதி, தமிழ்மாமணி, சொல்லழகர், திருப்பாவைச் செல்வர் போன்ற பல விருதுகளைத் தாங்கி நிற்கும் ஸ்ரீமான் K. A. மணவாளன் (திருவல்லிக்கேணி) 'வால்மீகி கம்ப ராமாயணங்களில் இயற்கை' என்ற தலைப்பில் நான்கு ஆண்டுகள் ஆராய்ச்சி செய்து சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் டாக்டர் பட்டம் (Doctor) அளிக்கப் பெற்றுள்ளார் என்பதறிந்து அகமிகமகிழ்கின்றோம், இன்னும் பல பட்டங்களையும் பெருமைகளையும் இவர்பெற்று இன்புற மனமார மங்களாசாஸனம் செய்கிறோம்.

( P. B. A. )

# சிலாசாஸனத் திறப்புவிழா

தி. அ. பாஷ்யமையங்கார்

மார்கழி மாதம் முடிவில் சென்னை மாநகரில் முத்தியால்பேட்டையில் பவழக்காரத் தெருவிலுள்ள ஸ்ரீக்ருஷ்ணன் ஸன்னிதியில், ஸ்ரீ க்ருஷ்ணாஷ்டகம், சதுச்ச்லோகி முதலான சில ஸ்தோத்ரங்களைப் பரமபக்தமணியான ( ஸ்ரீராமஜயம் அண்டு கோ., தலைவரான ஸ்ரீமான்

P. G. மாணிக்கச் செட்டியாரவர்கள் சிலாசாஸனம் செய்வித்து அமைத்திருந்தார். அதற்குத் திறப்புவிழா நமது பத்ராதிப ஸ்வாமியைக்கொண்டு 11—1—81 தேதி காலை 9 மணியிலிருந்து 11 மணிவரையில் சிறப்பாக நடப்பித்தார். ஸ்ரீமத பயவே அட்வகேட் P. B. அனந்தாசாரியர் ஸ்வாமி முதலான பெரியார்கள் ப்ரஸன்னமாயிருந்தார்கள். ஆயிரம் பக்தகோடிகள் குழுமியிருந்தார்கள் எல்லாரும் பெருமாள் பிரஸாதம் பெற்று மகிழ்ந்து சென்றூர்கள் இதுவொரு பெரிய திருவிழாவாக நடைபெற்றது. அந்த ஸந்தர்ப்பத்தில் எடுத்த திருவுருவப்படம்கீழே காண்மின்.



ஸ்ரீ:

श्रीमते रामानुजाय नमः। श्रीमद्वरवरमुनये नमः॥

ஸ்ரீமத் வேதமார்க்கேத்யாதிப்படி எழுந்தருளியிருக்கும் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி மஹாமஹிமோபாத்யாய, மஹாவித்வான் பெருமாள் கோயில் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியால்,

ஸ்ரீமதுபய வேதாந்த வித்வான் திருமலை அனந்தாண்பிள்ளை, திரு நாராயணபுரம் பிள்ளைலோகாசாரியர், சதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹா சார்ய ஸ்வாமியின் (ரௌத்ரி வருஷம், தை-மீ 15-ஆம் தேதி ஸ்வாதி திருநக்ஷத்திரத்தில் 28—1—1981 நடைபெற்ற) ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவத்தில் அநுக்ரஹிக்கப்பட்ட

# "மங்களாசாஸந பத்திரிகை"

श्रीरङ्ग-वेङ्कटाद्रि-श्रीमत्करिशैल-यादवाद्रीशाः।
श्रीगोविन्दनृसिंहाचार्याय दिशन्तु मङ्गलं सततम्॥

[திருவரங்கம் பெரியகோயில், திருமலை, பெருமாள்கோயில், திருநாராயண புரத்து எம்பெருமான்கள் ஸ்ரீ உ. வே. கோவிந்தநரஸிம்ஹாசார்ய ஸ்வாமிக்கு எப்பொழுதும் மங்களங்களைத் தந்தருளவேணும்.]

शताभिषेक-गोविन्द-नृसिंहार्यविपश्चितः।
षष्ट्यब्दपूर्ति-सुमुहूर्तोऽयं निर्विघ्नमेधताम्॥

[பேரறிவாளரான சதாபிஷேக கோவிந்தநரஸிம்ஹாசார்யரின் இந்த ஷஷ்ட்யப்தபூர்த்திச் சுப முஹூர்த்தம் எவ்வித இடையூறுமின்றி மேன் மேலும் வீறுடையதாய் விளங்கட்டும்.]

रौद्रिनामवत्सरीय-पौषमासि शोभने विष्णुचित्तसूरिचर्यभे शुभे महीतले।
अस्मदीय-भागधेय-वैभवात्कृतोदयः शेषसूरिवंशरत्नमेष सूरिरेधताम्॥

[மங்களகரமான ரௌத்ரிநாமஸம்வத்ஸரத்தில் சுபமான தை மாதத்தில் பெரியாழ்வார் திருவவதரித்த திருநக்ஷத்திரமான ஸ்வாதியில் நம் எல்லோருடைய பாக்கிய விசேஷத்தால் அவதரித்த திருமலை அனந் தாண்பிள்ளை வம்சரத்நமான இப்பெரியார் மேன்மேலும் அபிவ்ருத்தி யடையவேணும்.]

श्रीमद्यादवशैलभूषण-महाविद्वद्वरिष्ठाग्रिम-
श्रीगोविन्दगुरूत्तमाङ्घ्रिकमलद्वंद्वान्वयादुत्तमम्।
वैदुष्यं प्रतिपद्य शिष्यजनता-सञ्जीवने विश्रुतम्
श्रीगोविन्दनृसिंहसूरिमनिशं पश्येम पृथ्वीतले॥

[ஸ்ரீமத் யாதவகிரிக்கு அணிகலனாய், சிறந்த வித்வான்களுக்குத் தலைவரான திருமலை அநந்தாண்பிள்ளை, திருநாராயணபுரம் பிள்ளைலோகாசார்யர், ஸ்ரீ உ. வே. மஹாவித்வான் ஸ்ரீநிவாஸகோவிந்தப் பங்கார் ஸ்வாமியான தம் பெரிய திருத்தகப்பனாரின் தாமரைபோன்ற இணையடிகளின் ஸம்பந்தத்தால் மிகச்சிறந்த புலமையைப்பெற்று, தம் சிஷ்ய ஸமூஹத்தைத் திருத்தித் திருமகள் கேள்வனுக்காக்குவதில் மிக்க பெரும்புகழைப் பெற்றவரான ஸ்ரீகோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியை அனவரதமும் அவனியில் ஸேவிப்போமாகவேணும்.]

श्रीसूक्तिरत्नाकरवालधन्वि-श्रीमच्छठाराति-गुरूत्तमेन।
विशिष्य वृद्धिं गमितस्स एष गोविन्दसूरिस्सुचिरं समिन्धाम्॥

[ஸ்ரீஸூக்தி ரத்னாகர பிருதாலங்காரபூஷிதராய், இளையவில்லி குலதிலகரான ஸ்ரீ உ. வே. வித்வான் சடகோபாசார்ய ஸ்வாமியான தமது திருத்தமயனாரால் திருமேனியும், திவ்யஜ்ஞாநமும் மிகவும் வளர்க்கப்பெற்று விளங்கும் ஸ்ரீகோவிந்தநரஸிம்ஹாசார்யர் நீடூழிகாலம் நிலவுலகில் விளங்கட்டும்.]

आबाल्यादहमस्य पण्डितमणेस्संप्राप्य मैत्रीं परां
रासिक्यातिशयानुभूतिभरितो हर्षप्रकर्षान्वितः।
एतेनैव सहस्थितिं सुमहितां वाञ्छामि सोऽयं महान्
विद्यावैभवमात्मनः प्रकटयन् जीयाद्धरण्यां चिरम्॥

[இப்பண்டிதமணியின் இளமைப்பருவமே பிடித்து இவருடைய மிகச்சீரிய நட்பைப்பெற்று,இவருடைய மிகச்சிறந்த ரஸிகத்தன்மையையும் அநுபவித்து இன்பமிகவெய்தினேன். இவருடன் கூடி வாழ்தலையே மிகவிரும்புகிறேன். அத்தகைய இம்மஹான் தம் கல்வி கேள்விகளின் சிறப்புத்தன்மைகளை உலகினர்க்கு வெளிப்படுத்திக்கொண்டு இப்புவியில் இன்னுமொரு நூற்றாண்டு வெற்றிவாகை சூடி விளங்கவேணும்.]

श्री :

श्रीमते रामानुजाय नमः

श्रीशैलानन्तार्यमहागुरवे नमः

# ॥ अथ सप्तविभक्ति-शुभपद्यमाला ॥

(प्रथमा)

श्रीमद्भूतपुरीयसंस्कृतकलाशालान्वयात् साहितीम्
शास्त्रं व्याकरणं च सम्यगवगम्याध्यात्मविद्यास्तथा ।
श्रीमद्वेङ्कटसूरिवर्यसविधे संप्राप्य वृद्धिं गतः
श्रीमानेष शताभिषेकविबुधो जीयात् शतं वत्सरान् ॥

[ஸ்வாமி இராமாநுசர் அவதரித்த திவ்யக்ஷேத்ரமான ஸ்ரீபெரும்பூதூரில் விளங்கும் வடமொழிக் கல்லூரியில் சேர்ந்து ஸாஹித்யம் (இலக்கியம்), வியாகரணம் (இலக்கணம்) ஆகிய இரண்டையும் ஐயந்திரிபறக்கற்று, பின் அவ்வாறே ஸ்ரீமதுபயவேதாந்த ந்யாயவித்வான் காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியின் திருவடிவாரத்தில் ஸ்ரீபாஷ்யம், பகவத்விஷயம் முதலிய அத்யாத்ம சாஸ்த்ரங்களை வரியடைவே கற்று மிக்க மேன்மைபெற்றவரும், கைங்கர்ய ஸ்ரீயுடன் பொலிபவருமான மஹாவித்வான் ஸ்ரீசதாபிஷேகம் ஸ்வாமி நூறு ஆண்டுகள் விண்ணுமாளவேணும் மண்ணுமாடே.]

(द्वितीया)

भारद्वाजकुलाब्धिशीतकिरणं शेषार्यवर्यान्वय-
क्षीराम्भोनिधिकौस्तुभं गुणगणैरत्यद्भुतैर्भूषितम् ।
विद्याशेवधिमुत्तमैर्बुधवरैस्संश्लाघनीया गिरो
वर्षन्तं च शताभिषेकविबुधं पश्येम पृथ्व्यां चिरम् ॥

[பாரத்வாஜகுலமாகிற கடலில் தோன்றிய சந்திரன் போன்றவரும், அநந்தாழ்வான் குலமாகிற சமுத்திரத்தில் உண்டான கௌஸ்துபமணி போன்றவரும், வியக்கத்தக்க குணக்கூட்டங்களால் அழகுசெய்யப்பெற்றவரும், கல்வியின் இருப்பிடமானவரும், மிகவுயர்ந்த அறிவாளிகளால் கொண்டாடும்படியான வாக் அம்ருதத்தை வர்ஷிப்பவருமாய் விளங்கும் வித்வானான ஸ்ரீசதாபிஷேக ஸ்வாமியை இப்பார்மேல் நிரந்தரமாக ஸேவிக்கக்கடவோம்.]

(तृतीया)

सुचारुगुणशालिना सुमहितोपदेशार्पणैः
स्वपादकमलाश्रितान् विदधता पवित्रात्मनः ।
फणीन्द्रगुरुवंशजान्वयमनर्घमासेदुषा
नृसिंहगुरुणा सह क्षितितलेऽत्र मोदेमहि ॥

[மிகவழகிய குணங்கள் நிறைந்தவரும், மிகச்சிறந்த உபதேசங்களை அருள்வதன்மூலம் தமது திருப்பாத கமலங்களை வந்தடைந்தவர்களைத் திருத்தித் திருமகள் கேள்வனுக்காக்குபவரும், அனந்தாழ்வானுகிற குருச்சிரேட்டரின் ஏழாட்காலும் பழிப்பிலாத குலத்தில் வந்துதித்தவருமான ஸ்ரீந்ருஸிம்ஹ குருவோடு கூட இப்பூவுலகில் இன்பமிகவெய்திடுவோம்.]

(चतुर्थी)

शठारिमुखदिव्यसूर्यनघसूक्तिरत्नार्णवे
तथा सकलसद्गुरुप्रथितसूक्तिरत्नाकरे ।
निमग्नशुभचेतसे वरमुनीन्द्रदैवाय ते
नृसिंहगुरवे सदा कलयताच्छुभं रङ्गराट् ॥

[ஸ்ரீசடகோபர் வாய்மொழிந்த தீதிலந்தாதியாம் திருவாய்மொழி (திராவிட வேத) ஸாகரம் முதலான அருளிச்செயற்கடல்களிலும், அதேபோன்று தாழ்வாதுமில் குரவர்கள் அனைவரும் ஏழ்பாருமுய்ய உரைத்தவைகளாகிற சாத்திரக்கடலிலும் ஆழத்திளைக்கும் திருவுள்ளமுடையவரும், மணவாள மாமுனிகளைத் தெய்வமாகக்கொண்டிருப்பவருமான நரஸிம்ஹகுருவான தேவரீருக்குத் திருவரங்கேசனுர் நீங்காத செல்வத்தை அருளவேண்டும்.]

(पञ्चमी)

महामतिमतां सतां चरणपद्मसेवापरात्
निरन्तरसहस्रगीत्यनुभवैकनिष्ठाशयात् ।
अनन्तगुरुवंशजात् विदितवेदितव्यात् बुधात्
नृसिंहगुरुवंशजात् अपरमाद्रिये नैव भोः ॥

[பொங்கும் பரிவாலே மங்களாசாஸநத்தில் ஊன்றிய மனமுடைய பெரியோர்களின் பாதகமலங்களுக்கே தொண்டுபூண்டவரும், தமிழ்மறைகளாயிரத்தில் இடைவீடின்றி மன்னி இன்பமெய்துபவரும், திருவநந்தாழ்வான் திருவம்சத்தில் திருவவதரித்தவரும், அறியவேண்டும் அர்த்தமெல்லாம் அறிந்தவராதலால் அறிஞர்களில் தலைசிறந்தவருமாயுள்ள ஸ்ரீந்ருஸிம்ஹாசார்ய குருச்ரேஷ்டரைத் தவிர வேறொருவரை (என்மனம்) நினையாது கிடீர் !]

(षष्ठी)

द्वयार्थततिवर्षिणो वचनभूषणार्थामृत-
प्रवर्षणपटीयसस्सुललितोक्तिसन्दायिनः ।
स्पृहार्हगुणशेवधेर्हृदयहारिशोभावतः
सदा सरसभाषिणस्तव मुखं दिदृक्षे गुरो ! ॥

[ஸ்வாமிந் ! பெரியவரே ! த்வயார்த்த பரம்பரைகளை வர்ஷிப்பவரும், ஸ்ரீவசநபூஷணத்தின் வான்பொருளாகிற அம்ருதத்தைத் தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல வாழ உலகினில் பெய்திடுவதில் மிக்க விரகரும், மிக மிக எளிய நடையில் உபந்யாஸங்கள் செய்தருள்பவரும், விரும்பத் தக்க இனிய குணநலன்களுடன் கூடியவரும், மனத்தைக் கவர்ந்திழுக்கும் மோஹனவடிவுபடைத்தவரும், எஞ்ஞான்றும் இனிமையாகப் பேசுபவருமான தேவரீருடைய திருமுகமண்டலத்தை எப்பொழுதும் ஸேவிக்க விழைகின்றேன்.]

(सप्तमी)

शेषार्यान्वयसिन्धुशीतकिरणे सत्संप्रदायार्थदे
लोकाचार्य-वरोपयन्तृमुनिराट्-सन्दर्शिते सत्पथे ।
नित्यं कण्टकशोधके मतिमतां चेतस्यजस्रं स्थिते
श्रीगोविन्दगुरूत्तमे मम मनो नित्यानुरक्तं स्थितम् ॥

[திருவநந்தாழ்வான் திருவம்சமாகிற பாற்கடலில் தோன்றிய சந்திரன் போன்றவரும், முன்னோர்மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப்பேசுபவரும், பிள்ளை உலகாசிரியர், ஸ்வாமி மணவாளமாமுனிகள் ஆகிய பேராசிரியப் பெருந்தகைகளால் காட்டப்பட்ட நல்வழிகளில்

வந்து விழும் முட்களைக் களைந்து எறிகின்றவரும், அக்காரணத்தினாலேயே அறிவாளிகளின் நெஞ்சில் அனவரதமும் அமர்ந்திருப்பவருமான ஸ்ரீகோவிந்த(நரஸிம்ஹ)ாசார்ய ஸ்வாமியினிடத்தில் என்மனம் எப்போதும் ஆசையுடைத்து.]

Released by Maran's Dog ,Toronto, Canada

संबोधनम्–

विजयीभव शेषार्यवंशचन्द्र ! महामते !।
शताभिषेकगोविन्दनृसिंहार्य ! शतं समाः ॥

[திருவநந்தாழ்வான் திருக்குலத்துக்குத் திங்கள்போன்றவரே! அலர்மகள் கேள்வனடிபோற்றிவரும் பேரறிவாளரே ! ஸ்ரீசதாபிஷேக கோவிந்த நரஸிம்ஹாசாரியரே ! நூறு ஆண்டுகள் வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாளவேணும் மண்ணூடே.]

Released by Maran's Dog ,Toronto, Canada

विद्वद्वरेण्यवरदार्यसमेत ! नित्यम्
श्रीशेषसूरिकुलदीप ! नृसिंहसूरे !।
वेदान्तयुग्म-महितार्थविबोधनेन
कालं कृतार्थय समस्तमिहैव पृथ्व्याम् ॥

[தலைசிறந்த அறிஞரான ஸ்ரீ உ. வே. வேளுக்குடி வரதாசார்யஸ்வாமியுடன் என்றும் கூடியவரே! அனந்தாண்பிள்ளை குலத்துக்கோர் விளக்காய்த்தோன்றியவரே ! நரஸிம்ஹாசார்ய ஸூரியே ! இந்நிலவுலகில் வடமொழிமறை தென்மொழிமறை ஆகிய உபயவேதாந்தங்களின் சீரிய செம்பொருளை இந்த மண்ணுலகோர் தாமறியும்படி செப்புவதன்மூலமே, தேவரீர் காலம் முழுவதையும் பயனுடையதாகக் கழிக்கவேணும்.]

यस्य वागमृतासारपूरितं भुवनत्रयम् ।
इतिवद्भवतोर्वाग्भिः पूर्यतामखिलं जगत् ॥

[நஞ்ஜீயருடைய சொல்லமுதப் பெருமழையால் மூவுலகும் நிரப்பப் பட்டது என்னுமாபோலே தேவரீருடையவும், வரதாசார்யருடையவும் திருவாக்குகளால் உலகம் முழுவதும் நிரப்பப்பெறவேணும்.]

" शुभमस्तु "

Released by Maran's Dog ,Toronto, Canada

ஸ்ரீரஸ்து
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவரமுநயே நம:



श्रीकाञ्ची प्रतिवादिभयङ्करम् अण्णङ्गराचार्यविज्ञापितः

# षष्ट्यब्दवर्णमालास्तवः

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்ய ஸ்வாமியால் விண்ணப்பிக்கப்பெற்ற

# ஷஷ்ட்யப்தவர்ணமாலாஸ்தவம்

[ப்ரபவ முதலான வருஷங்களின் முதல் எழுத்துக்களில் தொடங்குகின்றவையாய், ஷஷ்ட்யப்தபூர்த்திகண்டருளும் ஶதாபிஷேக வரதாசார்ய ஸ்வாமிகளின் வைபவங்களை மாறிமாறி அநுபவிக்கும் ஆர்யாஶ்லோகங்களைக்கொண்ட துதிநூல்.]

षष्ट्यब्दवर्णमालास्तवमिममण्णङ्गरार्य आतनुते ।
गोविन्दनृहरिवरदार्यविपश्चितश्च महिमघनम् ॥

[ஶதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹாசார்யர், வேளுக்குடி வரதாசார்யர் ஆகிய இரு வித்வான்களின் பெருமைகள் நிரம்பிய இந்த ஷஷ்ட்யப்த வர்ணமாலா ஸ்தோத்ரத்தை (ஸ்ரீகாஞ்சீ) ப்ர. ப. அண்ணங்கராசார்யர் இயற்றுகிறார்.]

१. प्रभव (शताभिषेकार्य) प्रथितप्रभावशाली मकरस्वातीकृतोदयो विद्वान् ।
गोविन्दनृहरिनामा पुनरपि षष्ट्यब्दमहमिहानुभवेत् ॥

பிரஸித்தி பெற்ற பெருமைகள் நிரம்பியவராய், தை மாதம் ஸ்வாதீநக்ஷத்திரத்தில் அவதரித்த வித்வானான கோவிந்த நரஸிம்ஹாசார்யர் இவ்வுலகில் மறுபடியும் ஷஷ்ட்யப்தபூர்த்தியை அநுபவிக்கக் கடவாராக. 1.

२. विभव (वरदार्य) विद्यानिधिः प्रसिद्धो मकरविशाखोद्भवः श्रीमान् ।
वेळुक्कुडिवरदार्यो विजयेत शताधिकास्समा भूमौ ॥

கல்விக்கடல் என்று பிரஸித்தி பெற்றவராய், தை மாதம் விசாக நக்ஷத்திரத்தில் அவதரித்தவரான ஸ்ரீமான வேளுக்குடி வரதாசார்யர் நூறாண்டுகளுக்கு மேல் இவ்வுலகில் வாழ்வாராக. 2.

३. शुक्ल (यता) शुद्धस्त्रिभिरपि करणैश्शताभिषेकोपपदविभूषाढ्यः।
गोविन्दनृहरिसूरिर्जयतु पृथिव्यां विशुद्धयशसाऽऽढ्यः॥

முக்கரணங்களாலும் பரிஶுத்₃தி₄ பெற்றவராய், ஶதாபி₄ஷேகம் என்னும் அடைமொழியால் அலங்கரிக்கப்பெற்றவரான கோவிந்த நரஸிம்ஹாசார்யர் இவ்வுலகில் பரிஶுத்₃த₄மான புகழ் நிறைந்தவராய் வெற்றிபெறுவாராக. 3.

४. प्रमोदूत (वर) प्रचुरगुणसागर! श्रीवरदार्य! चिरादहं भवत्प्रेम्णः।
पात्रं भवामि तदिदं यावज्जीवं समेधतां प्रेम॥

கல்யாணகு₃ணக்கடலான ஸ்ரீவரதாசார்யரே! நீண்டநாளாக அடியேன் தேவரீரது ப்ரேமத்துக்குப் பாத்ரமாயிருக்கிறேன். இந்த ப்ரேமம் ஆயுளுள்ள வரையில் வளரட்டும். 4

५ प्रजोत्पत्ति (यता) प्रजनितसमस्तलोकः परमः पुरुषश्शताभिषेकार्य!।
सौहार्दबन्धुभावौ सुषुवे नौ भाग्यमेतदमितं मे॥

ஶதாபி₄ஷேகாசார்யரே! எல்லாவுலகையும் படைத்த பரமபுருஷன் நம்மிருவரையும் நட்புறவோடு கூடிய உறவினர்களாகப் படைத்தருளினான். இஃது எனக்கு நேர்ந்த அளவற்ற பா₄க்₃யமாகும். 5.

६. आंगीरस (वर) आयुस्सुदीर्घमिन्धां भवतो वरदार्य! विमलशास्त्रज्ञ!।
पुत्रकलत्रसमेतस्यामितयशसा समेधमानस्य॥

குற்றமற்ற ஶாஸ்த்ரங்களைக் கசடறக்கற்ற வரதாசார்யரே! நல்ல பிள்ளையோடும், மனைவியோடும் கூடி அளவற்ற கீர்த்தி பெற்று வளரும் தேவரீருக்கு ஆயுள் மிகநீண்டு வளரட்டும். 6.

७. श्रीमुख (यता) श्रीमुखमण्डलजातास्सूक्तीर्गोविन्दनृहरिगुरुवर्य!।
समयेषु शृण्वतो मे शुश्रूषा भवति सन्ततं तासाम्॥

கோவிந்தநரஸிம்ஹர் என்னும் திருநாமமுடைய ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரே! தேவரீரது திருமுகமண்ட₃லத்திலிருந்து வெளிவரும் ஸ்ரீஸூக்திகளை அவ்வப்போது கேட்கும் எனக்கு அவற்றை இடைவிடாமல் கேட்கவேண்டும் என்னும் விருப்பம் உண்டாகிறது. 7.

८. भव (वर) भवभयभेषजभूतान् शठजिन्मुनिवर्यदिव्यसूक्त्यर्थान्।
भवतो दिशि दिशि रसिकाः श्रावं श्रावं प्रमोदमृच्छन्ति॥

ஸம்ஸார ப,யமாகிற நோய்க்கு மருந்தான நம்மாழ்வாரின் அருளிச்செயலின் அர்த்த,ங்களை தேவரீரிடமிருந்து நாற்றிசைகளிலும் கேட்கும் ரஸிகர்கள் கேட்குந்தோறும் பேரானந்தமடைகின்றனர். 8.

९. युव (शता) युवताद्युपनिषदुदितं सर्वं सम्यक्समेधतां भवति।
शेषार्यवंश्यसिन्धौ राकाशशिवत् कृतावतार! सखे!॥

அநந்தாழ்வான் வம்சமாகிற கடலில் பூர்ண சந்திரன்போல் அவதரித்த நண்பரே! தைத்திரீய ஆநந்த,வல்லியில் 'யுவா ஸ்யாத்' என்று தொடங்கி ஓதப்பெற்ற யௌவனம் முதலிய எல்லா கு,ணங்களும் தேவரீரிடம் நன்கு பொருந்தி வளரட்டும். 9.

१०. धातु (वर) धारणशक्तिर्भवतः सूक्तितताीनां वरप्रदाचार्य!।
विस्मितमनसः कुरुते विबुधानखिलान् विवर्धतामेषा॥

வரதாசார்யரே! பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளில் தேவரீருக்குள்ள தா,ரணஶக்தி எல்லா வித்,வான்களையும் வியப்புற்ற நெஞ்சினராக்குகிறது. இந்த ஶக்தி மேன்மேலே வளரட்டும். 10.

११. ईश्वर (शता) ईषदपि दोषरहिताः फणितीस्सततं सभासु वर्षन्तम्।
विद्वद्गोविन्दनृसिंहार्य! भवन्तं सदैव पश्येम॥

பேரறிவாளரான கோவிந்தநரஸிம்ஹாசார்யரே! சிறிதும் குற்றமற்ற சொற்பொழிவுகளை ஸபை,களிலே பொழியும் தேவரீரை எப்போதும் காணக்கடவோம். 11.

१२. बहुधान्य (वर) बहवो वरदार्य! जगत्यस्मिन् विकिरन्ति वाक्प्रपञ्चं भोः।
भावत्कवाक्प्रपञ्चे माधुर्यमतीव वीक्ष्यते कस्मात्॥

வரதாசார்யரே! இவ்வுலகில் பலர் சொற்பொழிவுகளை நிகழ்த்துகிறார்கள். தேவரீருடைய சொற்பொழிவுகளில் மிகவும் இனிமை காணப்படுகிறதே; அஃது எதனால்? 12.

१३. प्रमादि (शता) प्रस्तुतविषयं त्यक्त्वा धावन्ति हि केचिदप्रसक्तेषु।
अभिषेकार्य! कदापि च नैवं पश्यन्ति भवदुपन्यासे॥

சொல்லப்புகுந்த விஷயத்தைவிட்டுத் தொடர்பில்லாத விஷயங்களில் காடுபாய்கிறார்கள் பலர். ஶதாபி,ஷேகாசார்யரே! தேவரீரது உபந்யாஸத்தில் எவரும் ஒருபோதும் இப்படிக் காண்கின்றிலர். 13.

१४. विक्रम (वर) विद्यापरिश्रमोऽस्मिन् भुवने भूयस्सु दृश्यते सत्सु।
स हि वरदार्य! विशिष्य त्वयि तु फलेग्रहिरभूदिदं सत्यम्॥

இவ்வுலகில் கல்வியில் கடுமையான உழைப்பு நல்லோர்கள் பலரிடத்திலும் மிகுதியாகக் காணப்படுகிறது. வரதாசார்யரே! அவ்வுழைப்பு தேவரீரிடத்திலேயே மிகவும் பயனுடையதாயிற்று என்பது உண்மையான வார்த்தையாகும். 14.

१५. विषु (शता) विविधकलासु विशेषात् परिश्रमस्ते विभात्युपन्यासे।
गोविन्दनृहरिसूरे! नात्रातिशयोक्तिलेशकणिकापि॥

கோவிந்தநரஸிம்ஹாசார்யரே! தேவரீருடைய உபந்யாஸத்தில் பலவிதமான கலைகளில் தேவரீருக்குள்ள மிகுந்த பழக்கம் விளங்காநிற்கிறது. இதில அதிஶயோக்தி (உயர்வு நவிற்சி) ஒரு சிறிதும் இல்லை. 15.

१६. चित्रभानु (वर) चित्ते कलयति स भवान् सततं गुरुवर्यचरणकमलानि।
अत एव वरदसूरे! भवदीयवचांसि मोदमादधते॥

வரதாசார்யரே! தேவரீர் ஆசார்யஶ்ரேஷ்டர்களின் திருவடித் தாமரைகளை நெஞ்சிலேயே கொண்டிருக்கிறீர். ஆகையினாலேயே தேவரீருடைய வார்த்தைகள் பேரானந்தத்தை விளைக்கின்றன. 16.

१७. स्वभानु (शता) स्वजनेषु परजनेष्वपि तुल्यो भावो विभाति तव चित्ते।
अत एव सर्वसुहृदित्यभिदधते त्वां शताभिषेकार्य!॥

ஶதாபிஷேகாசார்யரே! உம்மைச் சேர்ந்தவரிடத்திலும் எதிரிகளிடத்திலும் தேவரீருடைய சித்தவ்ருத்தி (மனநிலை) ஒருபடிப்பட்டதாயிருக்கிறது. அதனாலேயே அனைவரும் தேவரீரை 'அனைவர்க்கும் நண்பர்' என்று கூறுகிறார்கள். 17.

१८. तारण (वर) तारयसि वरदसूरे! उक्तिविशेषैर्भवाब्धिमखिलांश्च।
कारयसि पण्डितेन्द्रान् मूढानपि वाक्सुधावर्षैः॥

வரதாசார்யரே! அழகிய உமது வார்த்தைகளாகிற ஓடத்தாலே அனைவரையும் ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவிக்கிறீர். சொல்லமுதப் பெருக்காலே அறிவிலிகளையும் பண்டிதர் தலைவர்களாக ஆக்குகின்றீர். 18.

१९. पार्थिव (शता) पार्थिवचन्द्र इति त्वां कथयन्ति जनाः शताभिषेकार्य!।
दोषाकर इति नाम तु चन्द्रस्य स्यात् कदापि न स्यात् ते॥

ஶதாபி₄ஷேகாசார்யரே! 'இந்நிலவுலகில் ஒரு சந்திரன்' என்று தேவரீரை அனைவரும் கூறுகின்றார்கள். 'தோஷத்துக்கு (களங்கத்துக்கு) இருப்பிடம்' என்னும் பெயர் சந்திரனுக்கே உண்டு தேவரீருக்கு ஒருபோதும் கிடையாது. 19.

२०. व्यय (वर) व्यर्थकथाभिः कतिचित् क्षिपन्ति कालं वरप्रदार्यगुरो!।
लेशोऽपि तादृशानां वचसां नैवास्ति भवदुपन्यासे॥

வரதாசார்யரே! சில உபந்யாஸகர்கள் வீண்பேச்சுக்களைப் பேசிக் காலத்தைக் கழிக்கிறார்கள். உமது உபந்யாஸத்தில் அத்தகைய வார்த்தைகள் சிறிதும் இருப்பதில்லை. 20.

२१. सर्वजित् (शता) सर्वजिदाख्या भवतो न दुर्लभा स्याच्छताभिषेकगुरो!।
शुभगुणगणैर्भवानिह जितवानेवास्ति गुरुकटाक्षेण॥

ஶதாபி₄ஷேகாசார்யரே! 'அனைவரையும் வென்றவர்' என்னும் புகழ் தேவரீருக்கு மிக எளிதில் கிடைக்கிறது. ஆசார்ய கடாக்ஷத்தாலே விளைந்த பற்பல கல்யாணகு₃ணங்களாலே தேவரீர் அனைவரையும் வெற்றிகொண்டு விளங்குகிறீரன்றோ. 21.

२२. सर्वधारि (वर) सर्वज्ञभावनाऽस्मिन् लोके वरदार्य! वीक्ष्यते बहुषु।
तेऽपि भवदीयवाचः श्रुत्वा स्वल्पज्ञतां दधत्येव॥

வரதாசார்யரே! 'அனைத்தையும் அறிந்தோம் யாம்' என்னும் அஹங்காரம் இவ்வுலகில் பலரிடம் காணப்படுகிறது. அன்னவர்களும் தேவரீருடைய வார்த்தையைக் கேட்டவுடன் தங்களுடைய புல்லறிவைப் புரிந்துகொள்ளுகிறார்கள். 22.

२३. विरोधि (शता) विधिनिर्मिते प्रपञ्चे विश्वेषामपि विरोधिनस्सन्ति।
नहि भुवि शताभिषेकस्वामिनि दृश्येत तादृशः कोऽपि॥

பிரமனின் படைப்பான இவ்வுலகில் அனைவர்க்குமே எதிரிகள் உள்ளனர். ஆனால் ஶதாபி₄ஷேக ஸ்வாமி விஷயத்தில் அப்படி எவருமே காணப்படவில்லை. 23.

२४. विकृति (वर) विकृतिं पञ्चसु भूतेष्वदिशत् कृष्णः स्ववेणुगान इति।
शृणुमस्तदिदं साक्षात्कुर्मो वरदार्यवाक्प्रपञ्चेषु॥

கண்ணன் புல்லாங்குழல் ஊதும்போது ஐந்து பூதங்களையும் உருகவைத்தான் என்று கேள்விப்படுகிறோம். வரதாசார்யருடைய சொல்லமுதப் பெருக்கின்போது அதை நேரே காண்கிறோம். 24.

२५. खर (श्रोता) खलजनदुर्वचसामिह न गोचरो भवति हन्त! तत्रभवान्।
तदिदं भवतो महिमा गोविन्दनृसिंहसूरिवर! चित्रम्॥

கோவிந்த நரஸிம்ஹாசார்யவர்யரே! துஷ்டஜனங்களுடைய நிந்தா வசனங்களுக்கு இவ்வுலகில் தேவரீர் இலக்காவதில்லை என்பது வியப்பிற்குரியது. இது தேவரீருக்குள்ள ஆச்சர்யமான பெருமையாகும். 25.

२६. नन्दन (वर) नन्दन्ति केऽपि गीतैः केचिन्नन्दन्ति हरिकथाश्रवणैः।
वरदार्यसूक्तिवृन्दैः सर्वे नन्दन्ति रसविदो जगति॥

சிலர் பாட்டுக்களைக் கேட்டு இன்புறுகிறார்கள். சிலர் ஹரிகதைகளைக் கேட்டு இன்பமெய்துகிறார்கள். இவ்வுலகில் சுவையறிந்தவர் அனைவரும் வரதாசார்யரின் சொற்பொழிவுகளைக் கேட்டுப் பேரானந்தமடைகின்றனர். 26.

२७. विजय (श्रोता) विजयस्सभासु सर्वास्वनर्घस्ते शताभिषेकार्य!।
तदिदं स्वाचार्यदृशोः कटाक्षवीक्षणमहिम्न एव फलम्॥

ஶதாபிஷேகாசார்யரே! எல்லா ஸபைகளிலும் குறையற்ற வெற்றியே தேவரீருக்கு ஏற்படுகிறது. இப்பெருமை ஆசார்யகடாக்ஷ வைபவத்தின் பலனேயாகும். 27.

२८. जय (वर) जय जय वरदार्य! चिरं दिशि दिशि भवतो यशांसि जृम्भन्ताम्।
वद वद नित्यं मधुरास्सूक्तीर्दिश दिश मुदं समस्तहृदि॥

வரதாசார்யரே! நீண்டநாள் வெற்றி பெற்று விளங்குவீராக. திசைதொறும் தேவரீரது புகழ் பரவட்டும். தினந்தோறும் இனிய சொற்பொழிவுகளைப் பொழிவீராக. அனைவரது நெஞ்சிலும் பேரானந்தத்தை விளைப்பீராக. 28.

२९. मन्मथ (श्रोता) मन्मथमदहरविग्रहगोविन्दनृसिंह! तावकीर्वाचः।
शृण्वन्ति न खलु केचित् दिव्यवपुष्येव दृष्टिमादधते॥

மன்மதனின் கர்வத்தையும் போக்கடிக்கவல்ல திருமேனியையுடைய கோவிந்தநரஸிம்ஹாசார்யரே! சிலர் தேவரீருடைய சொற்பொழிவைக் கேட்பதில்லை. திருமேனியிலேயே கண் செலுத்தி நிற்கின்றார்களன்றோ. 29

३०. दुर्मुखि (वर) दुष्टोऽर्थ एव इति भोः वरदार्य! यथायथं विदन्तोऽपि।
केचिद्दुराग्रहेण प्रलपन्ति भवांस्तु शिक्षते तांस्तान्॥

இது தவருன அர்த்தம் என்று உள்ளபடி தெரிந்திருந்தபோதிலும் பிடிவாதத்தினால் அவ்வர்த்தங்களையே சிலர் பிதற்றுகின்றார்கள். வரதாசார்யரே! தேவரீர் அன்னவர்களையெல்லாம் திருத்தியருள்கின்றீர். 30.

३१. हेविलम्बि (शता) हे गोविन्दनृसिंहार्य! भवान् भूतपुरि किल वसन् बाल्ये।
साहित्यशब्दशास्त्राद्यधिकृत्य बभूव विश्रुतो विद्वान्॥

கோவிந்தநரஸிம்ஹாசார்யரே! தேவரீர் இளமையில் ஸ்ரீபெரும்பூதூரில் வாழ்ந்து, ஸாஹித்ய வ்யாகரண ஶாஸ்த்ரங்களைக் கற்று, பிரஸித்தவித்வானாகை ஆனீரன்றோ. 31.

३२. विलंबि (वर) विलयं गमयति सूक्तैर्वरदार्य! भवान् असंप्रदायार्थान्।
सत्संप्रदायसिद्धान् शुद्धानर्थान् स्थिरीकरोति भृशम्॥

வரதாசார்யரே! தேவரீர் சொற்பொழிவுகளாலே ஸம்ப்ரதாயத்திற்கு முரணான அர்த்தங்களை நிரஸித்தருள்கின்றீர். ஸத்ஸம்ப்ரதாய ஸித்தமாய், பரிஶுத்தமான அர்த்தங்களை நன்கு நிலைநிறுத்துகின்றீர். 32.

३३. विकारि (शता) विद्वद्गोविन्दनृसिंहार्य! भवत्पूर्वजश्शठारिगुरुः।
विभवान् भवतोऽपश्यन् प्राप परं धाम दुःखमधिकं मे॥

பேரறிவாளரான கோவிந்தநரஸிம்ஹாசார்யரே! தேவரீருடைய திருத்தமையனரான ஶடகோபாசார்யர் ஷஷ்ட்யப்த பூர்த்தி முதலான தேவரீருடைய வைபவங்களைக் காணமலே பரமபதமடைந்துவிட்டார் என்பது எனக்கு மிகவும் துனபத்தை விளைக்கின்றது. 33.

३४. शार्वरि (वर) शान्तिक्षान्तिमुखानां गुणराशीनां निकेत! वरदार्य!।
असकृद्भवन्मुखाब्जं दिदृक्षमाणोऽस्मि पुत्ररत्नयुत!॥

ஶாந்தி(புலனடக்கம்). பொறுமை முதலான குணக்கூட்டங்களுக்கு இருப்பிடமான வரதாசார்யரே! நல்ல பிள்ளையோடு கூடியவரே! தேவரீருடைய திருமுகத்தாமரையை அடிக்கடி காண விழைகின்றேன். 34.

३५. प्लव (शता) प्लवगपतिहनुमदुक्तीः श्रुत्वा रामो यथा प्रहृष्टोऽभूत्।
एवं गोविन्दनृसिंहार्य! वचोभिस्तव प्रमोदन्ति॥

கோவிந்தநரஸிம்ஹாசார்யரே! வானரஶ்ரேஷ்டனை அநுமனின் வார்த்தைகளைக் கேட்டு ராமபிரான் எப்படி மிகவுகந்தருளினனே அப்படியே உம் வார்த்தைகளைக் கேட்டு அனைவரும் மிகவுகக்கின்றார்கள். 35.

३६. शुभकृत् (वर) शुभकृत् समस्तजगतो भगवान् हरिरिति वदन्ति सर्वेऽपि।
वरदार्यवर्य भवता शुभानि भूरीणि जगति तन्यन्ते॥

எம்பெருமானுன ஹரி அனைத்துலகிற்கும் நன்மையைச் செய்பவன் என்று அனைவரும் கூறுகின்றார்கள் சிறந்தவரான வரதாசார்யரே! தேவரீரால் இவ்வுலகில் பல நன்மைகள் வளருகின்றன. 36.

३७. शोभकृत् (शता) शोभां जनयसि सदसो गोविन्दनृसिंह! विद्वदग्र्याणाम्।
एवं दिशि दिशि कलयसि कलय शताधिकसमाश्चिरं जीवन्॥

கோவிந்தநரஸிம்ஹாசார்யரே! வித்வத்வரிஷ்டர்கள் நிறைந்த ஸபைக்கு நீர் அணிகலனுகத் திகழ்கின்றீர். இந்தப் புகழை நாற்றிசைகளிலும் நீர் விளக்கின்றீர். நூருண்டுகளுக்குமேல் வாழ்ந்து இப்புகழை நெடுங்காலம் விளைப்பீராக. 37.

३८. क्रोधि (वर) क्रोधं वरदार्य! भवान् वहति दुरर्थप्रलापिजनतासु।
नित्यं प्रसन्नवदनो भवति सदर्थान् विबोधयन् श्रोतॄन्॥

வரதாசார்யரே! தவருன அர்த்தங்களைப் பிதற்றும் ஜனங்களிடம் தேவரீர் கோபத்தைக் கொள்கின்றீர். கேட்பவர்களுக்கு நல்ல அர்த்தங்களை உபதேசிக்கும்போதோ தெளிந்த திருமுகமண்டலத்தை உடையவராயிருக்கின்றீர். 38

३९. विश्वावसु (शता) विश्वप्रसिद्धकीर्तिर्यतिवरगोविन्दसूरिरिह भवते।
सत्संप्रदायसिद्धानर्थानखिलान् प्रबोधयामास॥

உலகம் நிறைந்த புகழாளராய், யதிஶ்ரேஷ்டரான கோவிந்தப்பங்கார் ஸ்வாமி தேவரீருக்கு ஸத்ஸம்ப்ரதாய ஸித்தமான அர்த்தங்களனைத்தையும் உணர்த்தியருளினுர். 39.

४०. पराभव (वर) परमपुरुषस्य विष्णोः पारम्यं ते मुखाब्जतः शृण्वन्।
हृष्यति सकलोऽपि जनो वरदार्य! शतं समा भवत्वेवम्॥

வரதாசார்யரே! பரமபுருஷனுன விஷ்ணுவின் பரத்வத்தை தேவரீருடைய திருமுகத்தாமரையின் மூலம் கேட்கின்றவர்கள் அனைவரும் உகக்கின்றனர். நூருண்டுகள் இப்படியே நடக்கட்டும். 40.

४१. प्लवंग (शता) प्लव इव संसृतिसागरतारणपटुरसि शताभिषेकार्य!।
तत्र च हेतुर्भवतो वैदुष्यसमेतवाग्मिता सत्यम्॥

ஶதாபிஷேகாசார்யரே! ஸம்ஸாரஸாகரத்தை ஓடம்போல் தாண்டுவிக்கவல்லவராயிருக்கிறீர் தேவரீர். தேவரீருடைய கல்

சிறப்போடு கூடிய வாக்குவன்மையே இதற்குக் காரணம் என்பது ஸத்யமாகும். 41.

४२. कीलक (वर) कीर्तिं वरदार्य! निजैर्वचोभिरभिवर्धयस्व सर्वत्र।
श्रीरङ्गनाथकृपया समिन्धतां सर्वसंपदस्सततम्॥

வரதாசார்யரே! உமது சொல்லமுதப் பெருக்காலே புகழை எங்கும் வளர்ப்பீராக. ஸ்ரீரங்கநாதனின் கருணையாலே தேவரீருக்கு எல்லாச் செல்வங்களும் எப்போதும் வளரட்டும். 42.

४३. सौम्य (शता) सौम्योपयन्तृयोगिश्रीसूक्तिमहार्थवर्षणैः कालम्।
गोविन्दनृहरिसूरे! यापय सह शिष्यमण्डलीभिरिह॥

கோவிந்தநரஸிம்ஹாசார்யரே! மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளின் அருமபொருள்களை வர்ஷிப்பதன்மூலமே இவ்வுலகில் ஶிஷ்ய ஸமூஹங்களோடு கூடிய தேவரீர் போதுபோக்கவேண்டும்.

अथवा— सौम्यमुखविद्वदग्रिम! शताभिषेकार्य! रङ्गधाम्नि चिरम्।
श्रीवचनभूषणार्थान् श्रीभाष्यार्थैस्सह प्रबोधय भोः॥

தெளிந்த திருமுகமண்டலத்தையுடைய வித்வான்களில் தலைமை பெற்ற ஶதாபிஷேகாசார்யரே! ஸ்ரீரங்கதிவ்ய நகரத்தில் — திகழ் வசனபூடணத்தின் ஆழ்பொருள்களை ஸ்ரீபாஷ்யார்த்தங்களோடு சேர்த்து உபதேஶித்தருள்வீராக. 43.

४४. साधारण (वर) साधुजनैस्सहवासस्सततं वरदार्य! दृश्यते भवतः।
साधून् करोषि सूक्तैः असतोऽपि जनान् क्षणादुपन्यस्तैः॥

வரதாசார்யரே! தேவரீருக்கு எப்போதும் நல்லவர்களோடு ஸஹவாஸமே காணப்படுகிறது. உபந்யாஸவாக்யங்களாலே தீயவர்களையும் கணப்பொழுதில் நல்லவர்களாக மாற்றுகின்றீர். 44.

४५. विरोधिकृत् (शता) विद्वद्वराभिनन्द्यं वैदुष्यं ते शताभिषेकार्य!।
सत्यं ततोऽपि भवतः सौशील्यगुणो मनोहरो भाति॥

ஶதாபிஷேகாசார்யரே! தலைசிறந்த வித்வான்களாலும் பாராட்டத்தக்கதாக உமது கலவிச் சிறப்பு விளங்குகிறது. அதைக் காட்டிலும் தேவரீரது ஸௌஶீல்யம் எனப்படும் நீர்மைகுணம் அனைவரது நெஞ்சையும் ஈர்ப்பதாய் விளங்காநிற்கிறது என்பது ஸத்யமே. 45.

४६. परीधावि (वर) परिहरसि वरदसूरे! दुर्गुणराशीन् सतो गुणान् सततम्।
अभिवर्धयन् विराजसि सन्तोषोऽयं समस्तसाधूनाम्॥

வரதாசார்யரே! எப்போதும் தீய குணங்களை விலக்கியும், நற்குணங்களை வளரச் செய்துகொண்டும் விளங்காநிற்கின்றீர். இது நல்லோர்களனைவருக்கும் பேரானந்தத்தை விளைக்கிறது. 46.

४७. प्रमादी (शता) प्रामाणिकार्थकथनेऽप्यहह! भजन्ते प्रकोपमिह केचित्।
गोविन्दनृहरिसूरे! तेषां मुखमपि न वीक्षते स भवान्॥

கோவிந்தநரஸிம்ஹாசார்யரே! உண்மையான அர்த்தங்களைச் சொன்னபோதிலும் சிலர் கடுங்கோபம் கொள்கின்றனரன்றோ! அவர்களுடைய முகத்தையும் நீர் கணிசிப்பதில்லை. 47.



४८. आनन्द (वर) आनन्ददायकस्ते सुपुत्रकृष्णो मया ध्रुवः प्रोक्तः।
वरदार्य! सोऽचिरेण प्राप्नोतु कलासु कौशलं सम्यक्॥

வரதாசார்யரே! என்னால் துருவன் என்று பெயரிடப்பெற்ற தேவரீரது நல்ல பிள்ளையான கிருஷ்ணன் அனைவர்க்கும் ஆனந்தத்தை அளிப்பவனாயிராநின்றான். அவன் எல்லாக் கலைகளிலும் மிக்க திறமையை விரைவில் அடைவானாக. 48.

४९. राक्षस (शता) राक्षसदैत्यसमानानपि शठकोपो मुनिस्समालोक्य।
गोविन्दनृहरिसूरे! यदिह प्रोचे भवांस्तदाचरति॥

கோவிந்தநரஸிம்ஹாசார்யரே! நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில் அரக்கரசுரர்களைக் குறித்து "அரக்கர் அசுரர் பிறந்தீருள்ளீரேல் உய்யும் வகையில்லை தொண்டர் ஊழி பெயர்த்திடும் கொன்றே" [திருவாய் 5-2-5] என்று யாதொரு ஸ்ரீஸூக்தியை அருளிச்செய்தாரோ அதை தேவரீர் நடத்திக்காட்டுகிறீர். 49



५०. नल (वर) नवनवमर्थं कथयन् वरदार्य! भवान् प्रहर्षयत्यखिलान्।
एवं शताधिकाब्दान् कथयन् मोदस्व सह सुपुत्राद्यैः॥

வரதாசார்யரே! தேவரீர் புதிது புதிதான அர்த்தங்களைச் சொல்லி அனைவரையும் உகப்பிக்கின்றீர். இவ்வண்ணமே நல்ல பிள்ளை முதலானவர்களோடு கூடியவராய், ஸதர்த்தங்களைப் பொழியாநிற்பவராய் நூறாண்டுகளுக்குமேல் இன்புறுவீராக. 50.

५१. पिङ्गल (शता) पितृसमपूर्वजशठरिपुगुरुवरसविधाच्च बहुतरानर्थान्।
रसानवाप्य विद्वच्छताभिषेकार्य! बोधयस्यखिलान्॥

பேரறிவாளரான ஶதாபிஷேகாசார்யரே! 'ஜ்யேஷ்ட ப்ராதா பிது: ஸம:' என்கிறபடியே தந்தைக்கு ஸமரான தேவரீரது தமையனார்

ஶடகோபாசார்யரிடமிருந்தும் இனிய பல அர்த்தங்களைப் பெற்ற தேவரீர் அவற்றை அனைவர்க்கும் உபதேஶிக்கிறீர். 51.

५२. कालयुक्ति (वर) कालस्सकलोऽपि तव श्रीमद्वरदार्य! यातु जगति चिरम्।
श्रीमल्लोकाचार्यश्रीवरयोगीन्द्रसूक्तिततिवर्षैः॥

செல்வம் மிக்க வரதாசார்யரே! ஸர்வஜ்ஞ ஸார்வபௌமர்களான பிள்ளைலோகாசார்யர் மணவாளமாமுனிகளுடைய ஸ்ரீஸூக்திகளை நெடுங்காலம் வர்ஷிப்பதிலேயே இவ்வுலகில் தேவரீருடைய பொழுதனைத்தும் கழியட்டும். 52.

५३. सिद्धार्थि (शता) सिद्धास्समस्तसंपत्समृद्धयस्ते शताभिषेकार्य!।
अभिमन्यसे स्वपुत्रान् सोदरपुत्रान् जयन्तु ते सुचिरम्॥

ஶதாபிஷேகாசார்யரே! தேவரீருக்கு எல்லாச் செல்வங்களும் நிறைந்து விளங்குகின்றன. தமையனுரது பிள்ளைகளை உமது பிள்ளைகளாக நீர் அபிமானிக்கின்றீர். அவர்கள் நெடுங்காலம் வெற்றி பெறுவார்களாக. 53.

५४. रौद्रि (वर) रौद्रिसमाख्येऽतीते वर्षे मकरे शठारिभे सुशुभे।
अवतीर्ण! वरदसूरे! पुनरपि रौद्र्यब्दमीक्षतां स भवान्॥

கடந்த ரௌத்ரி வருஷத்தில் தைமாதத்தில் நம்மாழ்வாருடையதான மிக மங்களமான விஶாகநக்ஷத்திரத்தில் அவதரித்த வரதாசார்யரே! தேவரீர் மறுபடியும் வரப்போகிற ரௌத்ரி வருஷத்தில் இரண்டாவது ஷஷ்ட்யப்தபூர்த்தியைக் கண்டருள்வீராக. 54.

५५. दुर्मति (शता) दुर्मुखिजनावलेपं हर्तुं रौद्र्यब्द मकरगस्वात्याम्।
भुव्यवतीर्ण! महात्मन्! शताभिषेकार्य! जीव यतिपतिवत्॥

தீயவர்களின் கர்வத்தைக் களைவதற்கு ரௌத்ரி வருஷத்தில் தைமாதத்தில் ஸ்வாதீநக்ஷத்திரத்தில் இந்நிலவுலகில் அவதரித்த பெரியவரான ஶதாபிஷேகாசார்யரே! யதிராஜரைப்போலே நூற்றிருபது வருஷங்கள் வாழ்வீராக. 55.

५६. दुन्दुभि (वर) दुष्पथसञ्चारिजनान् वरदार्य! भवान् विनेतुमवतीर्णः।
सत्संप्रदायरक्षां यावज्जीवं करोतु सानन्दम्॥

வரதாசார்யரே! தீயவழியில் நடக்கும் ஜனங்களை நல்வழிப்படுத்துவதற்காக தேவரீர் அவதரித்திருக்கிறீர். நம்முடைய பூர்வாசார்யர்களால் நிலைநிறுத்தப்பெற்ற ஸத்ஸம்ப்ரதாயத்தை தேவரீர் வாழ்நாள் முழுவதும் பேரானந்தத்துடன் ரக்ஷிப்பீராக. 56.

५७. रुधिरो (शता) रुन्धे तावकसूक्तिश्शताभिषेकार्य! संशयभ्रान्ती।
पूर्वाचार्यग्रन्थेष्वखिलजनस्तोमरञ्जनी मधुरा॥

ஶதாபிஷேகாசார்யரே! அனைவரையும் ஈடுபடச் செய்வதாய், மிக இனியதான தேவரீருடைய வார்த்தை பூர்வாசார்யக்ரந்தங்களில் ஸம்ஶயவிபர்யயங்களை (ஐயந்திரிபுகளை)ப்போக்கடிக்கிறது. 57.

५८. रक्ताक्षि (वर) रञ्जकसूक्तिविशेषैः रञ्जयसि प्राज्ञपुङ्गवान् सदसि।
भञ्जयसि दुर्मतानि प्रामाणिकवाग्भिराशु वरदार्य!॥

வரதாசார்யரே! பெருஞ்சபையில் பேரறிவாளர் தலைவர்களனைவரையும் ஆகர்ஷிக்கும் வார்த்தைகளாலே ஈடுபடுத்துகின்றீர். ப்ரமாணங்களோடு மிகப்பொருந்தியிருக்கும் வார்த்தைகளாலே தீய மதங்களைச் சடக்கென அழிக்கின்றீர். 58.

५९. क्रोधन (शता) क्रोशन्तु केचिदज्ञाः दुरर्थराशीन् शताभिषेकार्य!।
श्रीरङ्गनित्यवासी भवन् भवान् पातु दर्शनं सुचिरम्॥

ஶதாபிஷேகாசார்யரே! சில அறிவிலிகள் அவப்பொருள்களைப் பிதற்றட்டும். ஸ்ரீரங்கத்தில் எப்போதும் வாழ்பவராய் தேவரீர் தரிசனத்தை நீண்டநாள் ரக்ஷிப்பீராக. 59.

६०. अक्षय (वर) अक्षय्यसर्वसंपद्भरितो वरदार्य! भुवि चिरं जयतात्।
यतिराजदर्शनस्य क्षेमं तत एव भवति निरपायम्॥

வரதாசார்யரே! எல்லாச் செல்வங்களும் குறையற நிறையப் பெற்று இந்நிலவுலகில் நீண்டநாள் வெற்றிபெறுவீராக எம்பெருமானார் தரிசனத்திற்கு அதனாலேயே குறையற்ற வாழ்ச்சியுண்டாகும். 60.

षष्ट्यब्दवर्णमालास्तवमिममण्णङ्गरार्यसंकलितम्।
अभिनन्दतां सतामिह संपद्येरन् शुभानि भूयांसि॥

அண்ணங்கராசார்யரால் இயற்றப்பெற்றதான ஷஷ்ட்யப்தவர்ணமாலா ஸ்தோத்ரத்தைக் கொண்டாடும் நல்லோர்களுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்.

ஸுதர்ஶனம் ஆசிரியரின் தமிழ் விவரணத்தோடு கூடிய —
ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்வாமியால் இயற்றப்பெற்ற
ஷஷ்ட்யப்தவர்ணமாலாஸ்தவம் நிறைவுற்றது.

# ஸ்ரீ விஷ்ணு புராணத்தின் அநுபவம்

நாம் ஆதரிக்கவேண்டிய ப்ரமாண வர்க்கங்களைப் பேசுமிடத்து "ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகள்" என்கிறோம். காடகச்ருதியில் 'இதிஹாஸபுராணஞ்ச...... ஸர்வாஸ் தா:" என்று ஓதப்பட்டு வருவதால் ச்ருதிகள் போலவே இதிஹாஸ புராணங்களும் ப்ரபல ப்ரமாணங்களென்று கொள்ளத் தட்டில்லை. *இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ர்ம்ஹயேத்* என்கிற வசனம் ப்ரஸித்தம். இதிஹாஸ புராணங்களைக் கொண்டே வேதத்தின் பொருளை அறுதியிடவேணு மென்பது இதன் கருத்து. இதிஹாஸ புராணங்களின் உதவியைக் கொள்ளாமல் வேதப்பொருள் கூறத் தொடங்குமவன் அல்பச்ருத னெனப்படுகிறான். அன்னவனைக்கண்டு வேதம் நடுங்குகின்றதாம். ஏதனாலென்னில்; அல்பச்ருதனானவிவன் வேதார்த்தம் கூறுகிறே னென்றிழிந்து வாய்வந்தபடி யெல்லாம் பிதற்றி என்னை வஞ்சிக்கப் போகிறானேயென்று அஞ்சுகின்றதாம். வேதப் பொருளை விளக்கக் கருதி மஹர்ஷிகள் பராவரதத்துவங்களைக் கையிலங்கு நெல்லிக்கனி யாகக் கண்டு பரமகாருணிகர்களாய் பகவானுடைய ப்ரேரணை கொண்டே ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களை இயற்றினார்கள். அவற்றுள் ஸ்மிருதிகள் வேதத்தின் பூர்வபாகமான கர்மகாண்டத்திற்கு உபப்ர்ம்ஹணங்களாய்த் தோன்றியவை. மநு அத்ரி யாஜ்ஞவல்க்யாதி மஹர்ஷிகள் இயற்றிய தர்மசாஸ்த்ரங்களென்னுமவையே ஸ்மிருதி களாம். இதிஹாஸ புராணங்கள் வேதத்தின் உத்தரபாகமான உபநிஷத்துக்களுக்கு [வேதாந்தத்திற்கு] உபப்ர்ம்ஹணமாய்த்தோன் றியவை. கர்மகாண்ட வியாக்கியானங்களான ஸ்ம்ருதிகளிற்காட்டில் இதிஹாஸ புராணங்கள் மிகச் சிறந்தவை. ஸர்க்கம், ப்ரதிஸர்க்கம், வம்சம், மந்வந்தரம், வம்சாநுசரிதம் என்னுமிவற்றை ப்ரதிபாதனம் செய்யுமவை புராணங்கள். இவற்றுள், ஸர்க்கமாவது—ஸத்வாரக மாகவும் அத்வாரகமாகவும் நடக்கிற ஜகத்ஸ்ருஷ்டி. ப்ரதிஸர்க்க மாவது—நித்யநைமித்திக ப்ராக்ருதரூபமான ப்ரலயம். ஸ்தூல சிதசித் விசிஷ்டப்ரஹ்மமானது ஸூக்ஷ்மசிதசித் விசிஷ்ட ப்ரஹ்மமாகும் நிலை அது. வம்சமாவது ஆதிஸ்ருஷ்டியில் ப்ரவ்ருத்தர்களான மஹாபுருஷர் களின் ஸந்தான வரிசைகள். மந்வந்தரங்களாவன நான்முகனாலே ஸ்ருஷ்டி வ்யாபாரத்தில் அதிகரிக்கும்படி செய்யப்பட்ட ஸ்வாயம்புவ ஸ்வாரோசிஷாதிகளின் வியாபாரம். வம்சாநுசரிதமாவது சில புண்ய

ச்லோகர்களின் சரித்ராநுவர்ணனம். (இதிஹாஸங்களின் பரிஸ்திதி இப்படிப்பட்டதன்று.) புராணங்கள் வைஷ்ணவ நாரதீய பாகவதாதிகளாகப் பதினெட்டு மஹாபுராணங்களெனப்படும். வேறு பல உபபுராணங்களுமுள்ளன. இவையெல்லாம் கல்பபேதத்தாலே ஸத்வரஜஸ் தம: ப்ராசுர்யம் காரணமாக ஸாத்விக ராஜஸ தாமஸவ்யபதேசங்களையடைகின்றன. இவற்றுள் ராஜஸதாமஸங்களை விட்டு ஸாத்விகங்களையேகொள்ள வேணுமென்று பரத்வாஜமஹர்ஷி சொல்லி வைத்தார். *வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்மசாஸ்த்ரேஷு மாநவம்; பாரதே பகவத்கீதா புராணேஷு ச வைஷ்ணவம்* என்கிற வசனத்தினால்—வேதங்களுக்குள் புருஷஸூக்தம் சிறந்ததென்றும், ஸ்மிருதிகளுள் மநுஸ்மிருதி சிறந்ததென்றும், மஹாபாரதத்தினுள் பகவத்கீதை சிறந்ததென்றும், புராணங்களுள் ஸ்ரீ விஷ்ணுபுராணம் சிறந்ததென்றும் தெரிவிக்கப் படுகிறது. ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் *தத்வேந யச் சிதசிதீச்வர தத்ஸ்வபாவ போகாபவர்க்க ததுபாயகதீருதார:, ஸந்தர்சயந் நிரமிமீத புராணரத்னம் தஸ்மை நமோ முநிவராய பராசராய* என்று நம்மாழ்வாரோடொப்ப பராசரமஹர்ஷியைத் துதித்திருக்கையாலே அவர் சொன்ன ஸ்ரீவிஷ்ணு புராணம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு விசிஷ்ய உபாதேயமாகக் கடவது. இதில் உபஜீவ்யங்களான அர்த்தங்கள் அபரிமிதங்களாயிருக்கச் செய்தேயும் சிலவற்றையே கொள்ளுகிறோமிங்கு.

பகவத்கீதை க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதமாக அவதரித்தது போலவும், ஸ்ரீ ராமாயணம் வால்மீகிநாரத ஸம்வாதமாக அவதரித்தது போலவும் ஸ்ரீ விஷ்ணுபுராணம் மைத்ரேய பராசரஸம்வாதமாக அவதரித்தது. ஸ்ரீ ராமாயணத்தில் "நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முநிபுங்கவம்" என்று உபக்ரமத்திலுள்ளதேயாகிலும் அந்த மஹர்ஷிகளின் ஸம்வாதம் ஊடுருவிச் செல்லவில்லை. உபக்ரமமாத்ர விச்ராந்தமத்தனை. இந்த புராணரத்னத்தில் காணும் மைத்ரேய பராசரஸம்வாதமானது அடிதொடங்கி முடியளவும் அவிச்சிந்நமாயிருக்கும். முடிவில் மைத்ரேயர் சொல்லுவதையும் அதற்குப் பராசரர் சொல்லுவதையும் நோக்குமளவில், தத்வஜிஜ்ஞாஸுக்களுக்கு இந்த புராணரத்னமொன்றே போதுமானதென்பது விளங்கும். ஸ்ரீ ராமாயணத்தில் காண்டமென்றும் ஸர்க்கமென்றும் பாகுபாடுகளிருப்பதுபோல இந்த புராணரத்னத்தில் அம்சமென்றும் அத்யாயமென்றும் பாகுபாடு

களுள்ளது. ஆறு அம்சங்கள் கொண்டது இது. முதல் அம்சத்தில் இருபத்திரண்டுஅத்யாயங்களும், இரண்டாவது அம்சத்தில் பதினாறு அத்தியாயங்களும், மூன்ருவது அம்சத்தில் பதினெட்டு அத்தியாயங்களும், நான்காவது அம்சத்தில் இருபத்துநான்கு அத்யாயங்களும், ஐந்தாவது அம்சத்தில்முப்பத்தெட்டு அத்யாயங்களும், ஆருவது அம்சத்தில் எட்டு அத்யாயங்களுமுள்ளன. ஆக நூற்றிருபத்தாறு அத்யாயங்கள் கொண்ட இந்த புராணரத்னத்தில் கடைசியத்யாயத்தில் மைத்ரேயர் பராசரரைநோக்கி *பகவந்! கதிதம் ஸர்வம் யத் ப்ருஷ்டோஸி மயா முநே!....... நாந்யத் ப்ரஷ்டவ்யமஸ்தி மே. விச்சிந்நாஸ் ஸர்வஸந்தேஹா:.*என்று சொன்னதையும், அதற்குமேல் பராசரர் மிக விரிவாகச்சொல்லித் தலைக்கட்டினதையும் நோக்குமவர்களுக்கு இப்புராணத்தின் ஸர்வார்த்த பௌஷ்கல்யம் ஸுவிசதமாகும்.



இப்புராணத்தின் உபக்ரமத்தை நோக்குமிடத்து இதுவே பரமப்ராமாணிகமான புராணமென்பது புலனுகும். எங்ஙனேயென்னில்; ஆசார்யஹ்ருதயம்—நான்காவது ப்ரகரணத்தில் திருவாய்மொழி நான்காம்பத்தின் ஸாரஸங்க்ரஹமான சூர்ணையில் "இலிங்கத்து விளம்பும் பாஹ்யகுத்ருஷ்டிமத...." என்றவிடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியை யெடுத்துக்காட்டுவது போதுமிங்கு—



"*யந்மயஞ்ச ஜகத்ஸர்வம்* என்று பொதுவிலே ப்ரச்னம்பண்ண, *விஷ்ணோஸ் ஸகாசாதுத்பூதம்* என்று கோல்விழுக்காட்டாலே உத்தரமாகையன்றிக்கே 'எருமையை யானையாகக் கவிபாடித் தரவேணு' மென்பாரைப் போலே லிங்கமென்ருெரு வ்யக்தியை நிர்தேசித்து இதுக்கு உத்கர்ஷம் சொல்லித்தரவேணுமென்று, கேட்கிறவனும் தமோபிபூதனாய்க் கேட்க, சொல்லுகிறவனும் தமோபிபூதனாய்ச் சொல்ல இப்படி ப்ரவ்ருத்தமான லைங்கபுராணாதிகளான குத்ருஷ்டிஸ்மிருதிகளும்...."



என்பன மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகள். ஸ்ரீ விஷ்ணுபுராணத்தின் உபக்ரமமிருக்குமழகை உபபாதித்தபடியிது. உலகத்தில் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தைவிட ஸ்ரீ ராமாயணத்திற்கு ப்ரசாரம் அதிகமாதலால் அந்த இதிஹாஸச்ரேஷ்டத்தின் உபக்ரம மிருக்கும் படியை முன்னம் நினைப்பூட்டுவோம். *தபஸ்ஸ்வாத்யாயநிரதம்

தபஸ்வீ வாக்விதாம் வரம், நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முநிபுங்கவம்.* என்பது ஸ்ரீ ராமாயணத்தின் முதல் சுலோகம். வான்மீகி முனிவர் தமது ஆச்ரமத்திற்கு வந்த நாரத மஹர்ஷியை நோக்கிக் கேட்டார் என்று இந்தச்லோகத்திற் சொல்லிற்று. என்ன கேட்டாரென்பதை மேலே *கோ நு அஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச் ச வீர்யவாந்* என்று தொடங்கி மூன்று சுலோகங்களாலே சொல்லிற்று. 'ஸ்ரீராமனுடைய பெருமையைச் சொல்லும்' என்று அவர் கேட்கவில்லை; பொதுவாகச் சிறந்த சில திருக்குணங்களைச் சொல்லி இவற்றையுடையவனைச் சொல்லுமென்று இவ்வளவே கேட்டார். அவர் *இக்ஷ்வாகு வம்சப்ரபவோ ராமோ நாம ஜனைச் ச்ருத:* என்று தொடங்கித் தாமாக ஸ்ரீராமபிரானுடைய பெருமைகளைப் பேசினர். அதேபோல, இந்த ஸ்ரீ விஷ்ணுபுராணத்தின் தொடக்கத்திலும் மைத்ரேயருடைய வினவும் பராசருடைய விடையும் அமைந்துள்ளது. ஒரு வ்யக்தியைக் குறிப்பிட்டுக் கேள்வி பிறக்கவில்லை. விடை கூறும்போதுதான் *விஷ்ணோஸ் ஸகாசாத் உத்பூதம் ஜகத் தத்ரைவ ச ஸ்திதம்* என்று வ்யக்திவிசேஷ நிர்தேசமுள்ளது. இப்படி அமைவதனால்தான் புராணத்திற்கு ப்ராமாண்யாதிசயம்.

ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாமங்களில் வாஸுதேவ: என்பதுமொன்று. இத்திருநாமத்திற்குப் பெரும்பாலும் பலர் நினைத்திருக்கும் பொருள் 'வஸுதேவர்க்கு மகனாய்த் தோன்றினவன்' என்று. தாசரதி: என்கிற சொல் தசரதாத்மஜனைச் சொல்லுவதுபோல இதுவும் வஸுதேவாத்மஜனைச் சொல்லுகின்றதென்றால் தவறில்லை. ஆனால் இந்த புராணரத்னத்தில் (1-2-12.)*ஸர்வத்ராஸௌ ஸமஸ்தஞ்ச வஸத்யத்ரேதி வை யத:, ததஸ் ஸ வாஸுதேவேதி வித்வத்பி: பரிபட்யதே.* என்று நிர்வசனம் காட்டப்பட்டுள்ளது. வஸதீதி வாஸு:; வாஸுச் சாஸௌ தேவச் ச—வாஸுதேவ: என்று விக்ரஹம் காண்க. தான் ஸர்வத்ர வஸிப்பவனாய், தன்னிடத்தில் ஸர்வமும் வஸிக்கப்பெற்றதாயிருக்குமவன் வாஸுதேவன். பிள்ளையுலகாசார்யர் முமுக்ஷுப்படியில் "பகவந்மந்த்ரங்கள் தான் அனேகங்கள்; அவை தான் வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டுவர்க்கம். அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள்" என்றருளிச் செய்திருப்பது ப்ரஸித்தம். அஷ்டாக்ஷரி, ஷடக்ஷரி, த்வாதசாக்ஷரி என்ற மூன்றும் வ்யாபகமந்த்ரங்களாம். முறையே நாராயண—விஷ்ணு—வாஸுதேவத்

திருநாமங்களை உள்ளீடாகக் கொண்டவை இந்த மந்த்ரங்கள். வாஸுதேவமந்த்ரத்தை வ்யாபகமந்த்ரமாகக் கொள்ளவேண்டும் போது வஸுதேவபுத்திரனென்கிற பொருள் கொள்ளப் பொருத்த மில்லை. விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் வாஸுதேவநாமம் மூன்று பர்யாயம் ஓதப்பட்டுள்ளது. பட்டர் தமதுபாஷ்யத்தில் [பகவத்குண தர்ப்பணே] மேலே விவரித்த பொருளை முந்துற முன்னம் ஸாதித்து, மற்றவிடங்களில் வஸுதேவபுத்ரனென்னும் பொருளையுமருளினர்.

எம்பெருமான் மஹாவராஹாவதாரம் செய்தருளின பெருமை (1-4-26ல்) வெகு அற்புதமாக வருணிக்கப்படுகிறது. *ததஸ் ஸமுத்க்ஷிப்ய தராம் ஸ்வதம்ஷ்ட்ரயா மஹாவராஹஸ் ஸ்புடபத்மலோசந:, ரஸாதலாத் உத்பலபத்ரஸந்நிப: ஸமுத்திதோ நீல இவாசலோ மஹாந்* என்னுமிந்த ச்லோகத்தைத் திருவுள்ளம் பற்றியே நம்மாழ்வார் திருவாய்மொழியின் முடிவில் "நீலவரை இரண்டுபிறை கவ்வி நிமிர்ந்ததொப்பக் கோலவராகமொன்றாய் நிலங்கோட்டிடைக்கொண்ட வெந்தாய்!" என்கிற பாசுர மருளிச் செய்தார். இவ்வாழ்வார் தாய் பாசுரமாகப் பேசின *பாலனாயேழுலகுண்டு (4-2)* பதிகத்தில் *மாதர்மா மண்மடந்தை பொருட்டு ஏனமாய், ஆதியங்காலத்து அகலிடங் கீண்டவர், பாதங்கள் மேலணி பைம்பொன்துழாயென்றே ஓதும்மா லெய்தினள்* என்கிற பாசுரத்தினால் பூமிப்பிராட்டியை யுத்தரிக்க மஹாவராஹ மூர்த்தியாய்த் திருவவதரித்த காலத்தில் திருவடிகளில் சாத்தின திருத்துழாய் வேணுமென்கிற அபேக்ஷையைக்காட்டியுள்ளார். அந்த ஸமயத்தில் மஹார்ணவத்தில் எம்பெருமானுக்குப் பரிசர்யை பண்ண ப்ரஸக்தி ஏது? அப்போது யாருளர்? என்று சிலர் சங்கிக்கக் கூடுமென்று நம் ஆசாரியர்கள் *லோமாந்தரஸ்தா முநயஸ் ஸ்துவந்தி* என்கிற ச்லோகத்தை யெடுத்துக்காட்டியருளினர். அந்த ச்லோகம் இந்தப்ரகரணத்திலேயுள்ளது. (1-4-29.) *உத்திஷ்டதஸ் தஸ்ய ஜலார்த்ரகுக்ஷே: மஹாவராஹஸ்ய மஹீம் விக்ருஹ்ய, விதூந்வதோ வேதமயம் சரீரம் லோமாந்தரஸ்தா முநயஸ் ஸ்துவந்தி* என்பது புராண ரத்ன வசனம். வராஹப்பெருமாள் தம்முடைய திருமேனியை உதறும் போது ரோமகூபங்களில் பல மஹர்ஷிகள் ஒடுங்கியிருந்ததாகச் சொல்லப்பட்டது.

(1-9-126.) தேவேந்திரன் ஸ்ரீ மஹாலக்ஷ்மியை ஸ்தோத்ரம் பண்ணுமிடத்து *த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி:

பிதா, த்வயைதத் விஷ்ணுநா சாம்ப! ஜகத்வ்யாப்தம் சராசரம்* என்கிருன். (1-8-17ல்) *நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ, யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம!* என்றுள்ளது. இவற்றைக்கொண்டு எம்பெருமானுக்குப் போலவே பிராட்டிக்கும் ஸ்வரூபவ்யாப்தியுண்டு; (அதாவது விபுத்வமுண்டு) என்று சிலர் கூறுவர். இங்கு உண்மையை விளக்குவோம். மைத்ரேயர்க்கு உபதேசம் செய்துவருகின்ற பராசரர் *தேவௌ தாத்ருவிதாதாரௌ ப்ருகோ: க்க்யாதிரஸூயத, ச்ரியஞ்ச தேவதேவஸ்ய பத்நீ நாராயணஸ்ய யா* என்று, ப்ருகுபத்னியான க்க்யாதியென்பவள் தாதா விதாதா என்னுமிரண்டு தேவர்களேயும் நாராயணபத்னியான லக்ஷ்மியையும் பெற்றதாகக் கூறினர். அது கேட்ட மைத்ரேயர் *க்ஷீரோதாத் ஸ்ரீஸ்ஸமுத்பந்நா ச்ரூயதே அம்ருதமந்தநே, ப்ருகோ: க்க்யாத்யாம் ஸமுத்பந்நேத்யேததாஹ கதம் பவாந்?* என்று கேள்வி கேட்டார். நித்யையான லக்ஷ்மிக்கு உத்பத்தி சொல்லுவது எங்ஙனே கூடுமென்பது கேள்வியின் ஸாரம். இதற்கு விடையிறுக்கிருர்பராசரர்.... *நித்யைவைஷா ஜகந்மாதா..............ததைவேயம் த்விஜோத்தம* என்று. விஷ்ணு நித்யனுயிருக்கச் செய்தேயும் அவனுக்கு ஐச்சிகமான உற்பத்தி கூடுகிருப்போலே பிராட்டிக்குங்கூடுமென்று ஸமாதானஸாரம். நித்யனுய் நிகில ஜகஜ்ஜநகனுய் நித்யஸித்த லக்ஷமீ ஸம்பந்தசாலியாயிருக்கிற எம்பெருமான் ஸர்வஜகத்ரக்ஷணார்த்தமாக ஸர்வதேசங்களிலும் ஸர்வஜாதிகளிலும் அவ்வோ விக்ரஹ விசேஷ விசிஷ்டனுய்க்கொண்டு ஸந்நிஹிதனுகிருப்போல பிராட்டியும் நித்யையாய் நிகிலஜகஜ்ஜநநியாய் நித்யஸித்த பகவத் ஸம்பந்தசாலிநியாயிருக்கச்செய்தேயும் *நித்யாநபாயிநீம்* என்று சொன்ன நிரபாயத்வத்தை ரக்ஷித்துக்கொள்வதற்காக அப்பெருமானுக்கு ஏற்ற விக்ரஹ விசேஷங்களோடே ஸர்வத்ர ஸந்நிஹிதையாகின்ருள் என்றதாயிற்று. நிரபாயத்வமென்பது விச்லேஷ அஸஹத்வமாத்திரமேயன்று, நியதஸாஹசர்யமுமாகையாலே பிராட்டியின் இந்த ஸந்நிதியானது நிரபாயத்வரக்ஷணார்த்தமேயாகின்றது. இதற்குமேல் *அர்த்தோ விஷ்ணுரியம் வாணீ* என்று தொடங்கி *ரதீ ராகச் ச தர்மச் ச லக்ஷ்மீர் கோவிந்த ஏவ ச* என்னுமளவான பதினுறுச்லோகங்களாலே திவ்யதம்பதிகளின் விக்ரஹவ்யாப்திப்ரகாரத்தைநன்கு உபபாதித்திருக்கையாலே விக்ரஹவ்யாப்தியே ஸர்வகதசப்தார்த்தமாகத் தகுதியுடையது. ஸ்வரூபவ்யாப்தி விவக்ஷிதமாகில் *தேவதிர்யங் மநுஷ்யேஷு

புந்நாமா பகவாந் ஹரி:, ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய நாநயோர் வித்யதே பரம்.* என்றது பொருந்தாதே. அடுத்த ஒன்பதா மத்யாயத்திலும் *ஏவம் யதா ஜகத்ஸ்வாமீ தேவதேவோ ஜநார்தந:, அவதாரம் கரோத்யேஷா ததா ஸ்ரீ ஸ்தத்ஸஹாயிநீ; புநச் ச பத்மா ஸம்பூதா ஹ்யாதித்யோபூத் யதா ஹரி:. யதாச பார்க்கவோ ராமஸ் ததாபூத் தரணீத்வியம். ராகவத்வேபவத்ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி, அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷா அநபாயிநீ. தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர் தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ் தநூம்.* என்கிற சுலோகங்களாலும் ப்ரச்நோத்தரவாக்யத்தின் முதலிலுள்ள ஸர்வகதத்வோக்தியானது நன்கு வியாக்கியானம் செய்யப்பட்டதாயிற்று. *த்வயா ச விஷ்ணுநா சாம்ப ஜகத்வ்யாப்தம் சராசரம்* என்ற வசனமும் இப்புடையிலேதானே நன்கு பொருந்துகின்றதாயிற்று. அந்த ப்ரகரணத்திலேயேயன்றோ *ஸௌம்யா ஸௌம்யைர் ஜகத்ரூபைஸ் த்வயைதத் தேவி! பூரிதம்* என்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லியுள்ளது. இவ்வர்த்தங்களையெல்லாம் பட்டர் அநுஜநுரநுரூபசேஷ்டா* என்கிறச்லோகத்திஞல் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்திலும், *யதி மநுஜதிரச்சாம்* என்கிறச்லோகத்திஞல் ஸ்ரீகுணரத்நகோசத்திலும் திடமாக்கிவைத்தருளினர். ஆக, ஜீவகோடி ப்ரவிஷ்டையான பிராட்டி அணுஸ்வரூபையேயல்லது விபுஸ்வரூபையல்லளென்றும், வ்யாப்தி சொன்னவிடம் விக்ரஹவ்யாப்தியேயன்றி ஸ்வரூபவ்யாப்தியன்றென்றும் நிர்ணீதமாயிற்று.

இந்தப் புராணத்தில் முதலம்சத்தில் த்ருவசரித்ரமும் ப்ரஹ்லாத சரித்ரமும் அற்புதமாகக் காணத்தக்கவை. த்ருவசரித்திரம் ஸாமாந்யமானது. அந்த பாலபக்தனுக்கு இளமையிலேயே ரோஷமுண்டானதும், கோரமாதவம் செய்யப் புறப்பட்டதும், ஸப்தர்ஷி ஸமாகமமும், பகவத் ஸாக்ஷாத்காரமும், பகவான் அவனை சங்கத்திஞல் ஸ்பர்சித்து ஸர்வஜ்ஞனாக்கியதும் நிற்க. அதற்கடுத்தபடியாக ப்ரஹ்லாதாழ்வானுடைய விருத்தாந்தம் பரமபோக்யமாக அநுபவிக்கத்தக்கது. இவனைப்பற்றி (1-15-156) *தர்மாத்மா ஸத்யசௌசாதிகுணநாம் ஆகர: பர:* என்று பராசரமுனிவர் கூறினது பெரிதன்று. *உபமாநமசேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதாபவத்* என்றதுதான் ஈடுமெடுப்புமில்லாத வார்த்தை. ஸாதுக்களுக்கு உபமானம் சொல்லும்போது ப்ரஹ்லாதாழ்வானையே சொல்லுவர்களாம். ப்ரஹ்லாதாழ்வானுடைய பெருமையைப் பலர்

பாக்கப்பேசினாலும் "அவன் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு விஜயத் வஜமானவன்" என்கிற பெருமையொன்றே தலைசிறந்ததாகும். பகவான் ஸகல சராசரங்களையும் சரீரமாகக்கொண்டு தான் சரீரியாய் [அந்தர்யாமியாய்] நிற்கிறானென்பதுதானே விசிஷ்டாத்வைத ஸித்தாந்தஸாரம். இதனை நன்கு கண்டறிந்து பிறர்க்கும் நன்றாகக் காட்டினவன் ப்ரஹ்லாதாழ்வானொருவனே யாவன். அதை நன்கு விவரிப்போம்.



8. *அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ்ஸ்தித:* என்ற ச்ருதியை மதாந்தரஸ்தர்களும் ஓதுகின்றார்கள், உபந்யஸிக்கின்றார்கள். எனினும் இந்த ச்ருதி அவர்களது கொள்கைக்குச் சிறிதும் கைகொடுப்பதில்லை. ஸுபாலோபநிஷதாதி ப்ரஸித்தமாய் ஸர்வாந்தர்யாமித்வ பர்யவஸாயியான சரீராத்மபாவத்தை அத்வைதிகளும் இசைந்தார்களாகில் அவர்களும் விசிஷ்டாத்வைதிகளாக விளங்கக் குறையில்லையே. நாம் ப்ரதான ப்ரதிதந்த்ரார்த்தமென்று கொள்ளுமதனைத்தானே ப்ரஹ்லாதாழ்வான் நிதியாகக்கொண்டுவெற்றி பெற்றது. *ஸர்வபூதாத்மகே தாத ஜகந்நாதே ஜகந்மயே, பரமாத்மநி கோவிந்தே* என்று இச்சிறுவன் தந்தைக்கு உபதேசம் பண்ணினதும் இதுதானே. * எங்குமுளன் கண்ணனென்ற மகனைக்காய்ந்த இரணியன் *எங்குமுளனென்ற தத்துவத்தையன்றோ ப்ரத்யக்ஷீகரித்தான். *ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந்மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸது விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:* என்கிறபடியே கருவிலே திருவுடையானிவன். தாயான கயாதுவின் கருவிலே வஸிக்கும்போதே நாரத மஹர்ஷியால் திருவஷ்டாக்ஷரோபதேசம் பெற்றவன். ஆகவேதான் பரிமளத்தோடு கூடவே அங்குரிக்கும் திருத்துழாய்போலே இவனும் ஸஹஜஜ்ஞாநபக்திகளைய்த் தோன்றினான். இவன் தன்னுடைய பக்திச் செல்வத்தைப் பலபடிகளாலே வெளியிட்டுள்ளான். (பதினேழாமத்யாயத்தில்) *ச்ரூயதாம் பரமார்த்தோமே தைதேயா திதிஜந்மஜா:!* என்று தொடங்கி ஒரு முப்பத்தைந்து சுலோகங்களாலே ஸமவயஸ்கர்களான அஸுர குமாரர்களுக்கு உபதேசிக்கும் அர்த்தங்கள் உண்மையில் அவனுடைய பிரதிஜ்ஞையின்படி பரமார்த்தமே. பல பல வகையான ஆபத்துக்களை விளைவித்தும் ஒன்றுக்கும் சளைக்காத விவனை தந்தையான இரணியன் அருகேயழைத்து, "பிள்ளாய்! உன்னுடைய பிரபாவம் அபரிமிதமாகக்

காண்கிறதே; இதற்கு என்ன காரணம்? இயற்கையான பெருமையா இது? ஏதேனும் மந்த்ரஸித்தி பெற்றிருக்கிருயா? சொல்லு'' என்று வினவ: அதற்கு விடை கூறும் சிறுவன் "ந மந்த்ராதிக்ருதஸ்தாத! ஸநவ நைஸர்கிகோ மம, ப்ரபாவ ஏஷ ஸாமாந்யோ யஸ்ய யஸ்யாச்யுதோ ஹ்ருதி'' என்று தொடங்கி ஆச்சரியமாகச் சொல்லுகிருன். அவிவேகிகளில் தலைவனுன அத் தந்தை சிறுக்கன் பக்கலில் குணங் கண்டு ஆசார்ய பரதிபத்தி பண்ணவேண்டியிருக்க, அதற்கு நேர் மாருகச் சீற்றமே மேலிட்டு 'இப்பயலை கிரிப்ருஷ்டத்தில் நின்றும் தள்ளுங்கள்; கீழே உருண்டு விழுந்து கல்லிலும் முள்ளிலும் சிதைந்து தொலையட்டும்' என்று கிங்கரர்களுக்குக் கட்டளையிட்டான். அவர்களும் அப்படியே செய்ய. அச்சிறுவன் கீழே புரண்டு விழும்போது எப்படி விழுந்தானென்பதைக் கூறுகின்ற பராசர முனிவர் *பபாத ஸோபி அத: க்ஷிப்த: ஹ்ருதயேநோத்வஹந் ஹரிம்* என்ருர். 'என்னுடைய ஹ்ருதயத்திலுறையும் பகவானுக்கு ஒரு ஆபத்துமில்லாமலிருக்க வேணுமே' என்று மார்பிலே கை வைத்துக்கொண்டே விழுந்தானென் கிருர். இத்தகைய பக்தி எந்த மஹர்ஷிக்கும் ஆரோபிதமாகவுங்கூட விளையுமதன்றே.

வேதாந்தங்களில் ஸாமாநாதிகரண்யநிர்தேசம் பல விடங்களில் காண்பதுண்டு *ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட்* ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ் தது சந்த்ரமா.* என்ருப்போலே காணப்படும் வசனவ்யக்திகள் ஸாமாநாதி கரண்ய நிர்தேசமெனப்படும். ஒரே விபக்தியால் நிர்தேசிப்பது ஸாமா நாதிகரண்ய நிர்தேசமென்று கொள்க. இவ்விடங்களில் தான் கலக்கம் விளையும். எதனுலென்னில், அத்வைத வாஸனை தோன்றுவதனுல், *தத் த்வமஸி* *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* *ஐததாத்ம்யமிதம் ஸர்வம்* இத்யாதி ஸ்தலங்களில் ஸமாநாதிகரண நிர்தேசமிருப்பது கொண்டன்ரே அங்கு விவாதம் விளைந்திட்டது. ஆழ்வார்களின் திவ்யஸூக்தி களிலுங்கூட இத்தகைய நிர்தேசத்தை *நீராய் நிலனுய்த் தீயாய்க் காலாய் நெடுவானுய்* இத்யாதி ஸ்தலங்களிற் காண்கிருேம். ஆழ்வார் திருவாய்மொழி தொடக்கத்திலேயே *உடன்மிசையுயிரெனக் கரந் தெங்கும் பரந்துளன்* என்கிற சந்தையினுல் சரீராத்மபாவத்தைக் காட்டியருளினபடியால் அருளிச் செயல்களை எளிதாக நிர்வஹிக்

கிறோம். அவ்வண்ணமாகவே வடமொழி வேதாந்த வாக்கியங்களையும் அந்தர்யாமி ப்ராஹ்மணாதிகளைக் கொண்டு நிர்வஹிக்கிறோம்; இவ் விஷயத்தைப் பராசரமஹர்ஷியின் வசனத்திலுங்காணலாம். எங்ஙனே யென்னில்;

(2—12—38.) *ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் புவநாநி விஷ்ணுர் வநாநி விஷ்ணுர் கிரயோ திசச்ச, நத்யஸ் ஸமுத்ராச்ச ஸ ஏவ ஸர்வம் யதஸ்தி யந்நாஸ்தி ச விப்ரவர்ய!* என்கிற ச்லோகமானது ஸகலமும் அவனேயென்று கூறுகையாலே அத்வைத ப்ரமத்தை விளைக்கும். அதற்கு இடமில்லாதபடி, சரீராத்ம பாவத்தாலே இதை நிர்வஹிக்க வேணுமென்பதை மஹர்ஷி முந்தின ச்லோகத்தில் காட்டிவைத்தார். (அதாவது) *யதம்பு வைஷ்ணவ: காய: ததோ விப்ர! வஸுந்தரா, பத்மாகாரா ஸமுத்பூதா பர்வதாப்த்யாதி ஸம்யுதா.* என்பது முந்தின ச்லோகம். இங்கு விஷ்ணு சித்தீயமென்கிற எங்களாழ்வான் வியாக்கியானம் நன்கு விளக்கம் காட்டியுள்ளது. அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் இவை—

"அம்புந: விஷ்ணோ: காயத்வேந தத்பரிணாமபூதம் ப்ரஹ்மாண்டமபி தஸ்ய காய:; தஸ்ய ச விஷ்ணுராத்மேதி ஸகலச்ருதிகத—தாதாத்ம்யோபதேச—உபப்ரும்ஹணரூபஸ்ய ஜ்யோதீம்ஷீத்யாதிநா வக்ஷ்யமாணஸ்ய ஸாமாநாதிகரண்யஸ்ய சரீராத்மபாவ ஏவ நிபந்தநம் இத்யாஹ......" என்று.

ஆக, ஸமாநாதிகரண நிர்தேசம் இவ்வண்ணமாக எங்குக் கண்டாலும் நம்முடைய ஸித்தாந்தத்திற்கு ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்தமான சரீராத்ம பாவத்தை யுணர்ந்தவர்களுக்கு நிர்வாஹம் எளிதாம் என்றதாயிற்று.

மேலேயுதாஹரித்த *ஜ்யோதீம்ஷி விஷ்ணுரித்யாதி ச்லோகத்தின் முடிவில் *யதஸ்தி யந்நாஸ்தி ச* என்றுள்ளதில் ஒரு சங்கை யுதிக்கும். யதஸ்தி என்பதனாலே உள்ள பதார்த்தங்களெல்லாம் பரமாத்மாவுக்கு சரீரபூதம் என்று சொன்னது பொருத்தம்: உடனே 'யந்நாஸ்தி ச" என்று இல்லாத வஸ்துக்களும் அவனுக்கு சரீரபூதமென்கிறதே, இது எப்படி பொருந்தும்? என்று சங்கிக்க நேரும். அநுபபத்தியொன்றுமில்லை, கேண்மின். அஸ்தி சப்தத்தாலே சேதநப் பொருளையும், நாஸ்தி சப்தத்தாலே அசேதனப பொருளையும் சொல்லு

கிறது நம்முடைய தர்சனத்தில் இல்லாத வஸ்து எதுவுமே கிடையாது. 'துணியில்லை' என்றால் துணியான வுருவத்தோடு இல்லையானாலும், தந்துசகலமான உருவத்தோடு இருந்து தீரும். இப்படி ஒவ்வொரு பதார்த்தத்திலுங் காணலாம். பகவத்கீதையில் (2-16) *நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத:, உபயோரபி த்ருஷ்டோந்த* என்கிற ச்லோகத்தில் 'உபயோரபி அந்த: த்ருஷ்ட:" என்றதை நிர்வஹிப்பது அருமைப்படும், அந்த: என்பதற்கு நாசமென்கிற பொருள் ப்ரஸித்தமாயிருப்பதனால் தேஹமும் ஆத்மாவுமான இரண்டுக்கும் நாசம் காணப்பட்டது என்றதாகப் பொருள் கொண்டு தடுமாறுவர்கள். இங்கு அப்படி பொருளன்று; நம்முடைய பாஷ்யகாரர் செய்தருளின பொருளாவது—அந்த:-நிர்ணயமென்றபடி; அசேதநத்துக்கு அஸத்வமும், சேதநனுக்கு [ஆத்மாவுக்கு] ஸத்த்வமும் தேறிற்று என்பதாக. ஆக *யதஸ்தி யந்நாஸ்திச* என்றதில் அனுபபத்தியொன்றுமில்லை. திருவாய்மொழியில் *இல்லது முள்ளதுமல்லதவனுரு- என்றவிடமும் இங்கு நினைக்கத்தக்கது. 'அவனுரு உள்ளதுமல்ல இல்லதுமல்ல'—பகவத் ஸ்வரூபம் சேதநாசேதந விலக்ஷணமென்றபடி. *யதஸ்தி யந்நாஸ்தி போலவே *இல்லதுமுள்ளதுமென்றது.

மூன்றாவது அம்சத்தில் ஸப்தர்ஷிகளின் விவரணம், வ்யாஸ மஹர்ஷியின் பெருமை, அஷ்டாதச புராணங்களின் விவரணம் முக்கியமாகக் காணத்தக்கன. வஸிஷ்டர், காச்யபர், அத்ரி, ஜமதக்நி, கௌதமர், விச்வாமித்ரர், பரத்வாஜர் ஆகிய எழுவர் ஸப்தர்ஷிகளாகக் கூறப்பட்டனர். (3-1-32) நெஞ்சிலே தேக்கிக்கொள்ள முடியாமல் ஏட்டிலே காணத்தக்க விஷயங்கள் இந்த கெட்டத்தில் வரிசையாக வாசிக்கத்தக்கன. இருபத்து நான்கு அத்யாயங்கள் கொண்ட நான்காவது அம்சம் பூர்த்தியாகப் பெரும்பாலும் கத்ய ரூபம். இடையிடையில் சிறுபான்மை சுலோகங்களுமுண்டு. இதில் இரண்டாமத்யாயத்தில் மாந்தாதாவின் துஹித்ருஸந்ததி விசேஷங்களைச் சொல்லப் புகுந்து ஸௌபரி சரித்திரம் அற்புதமாக வருணிக்கப்படுகிறது. அவர் பன்னிரண்டு வருஷகாலம் நீருக்குள்ளே தவம்புரிந்திருந்து ஒரு நாள் மத்ஸ்யங்களின் ஸகுடும்ப விஹாரத்தையுற்று நோக்கித் தானும் குடும்பியாகவேணுமென்று ஆசை கொண்டு, ஐம்பது பெண்களைப் பெற்றிருந்த மாந்தாதாவினிடம் சென்று ஒரு பெண்ணைத் தனக்கு

கொடுக்கும்படி கேட்டு, பிறகு தன்னுடைய மாயச்செய்கையினால் ஐம்பது பெண்களும் மேல்விழுந்து தன்னை மணந்துகொள்ளும்படியாகச் செய்துகொண்டு ஐம்பது வடிவெடுத்து ஐம்பது மாடமாளிகைகளில் வஸித்துச் சிற்றின்பம் நுகர்ந்த வரலாறு சொல்லப்படுகிறது.

முப்பத்தெட்டு அத்யாயங்கள் கொண்டதான ஐந்தாவது அம்சம் பூர்த்தியாக ஸ்ரீக்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களை அத்புதமாகப் பேசுகிறது. கண்ணபிரான் திருவாய்ப்பாடியிலிருந்து கொண்டு செய்த அதிமாநுஷ சேஷ்டிதங்களைப் பதினேழாமத்யாயம் முடியப் பேசியுள்ளது. நம் ஆசார்யர்கள் க்ருஷ்ணாவதாராநுபவத்திற்கு உதாஹரிக்கும் ச்லோகங்கள் பெரும்பாலும் இதில் நின்றுமேயாம். ஸ்ரீ விஷ்ணுபுராணத்தைவிட ஸ்ரீ பாகவதம் விரிவாகச் சொல்லுமதாயிருக்கச் செய்தேயும் ஆளவந்தார் உகந்தது ஸ்ரீ விஷ்ணுபுராணம் என்கிற கௌரவ ப்ரதிபத்தியினால் இதிலேயே அதிகமான ஆதரம் காட்டியுள்ளார்கள். ஸ்ரீ பாகவதத்தை உபேக்ஷித்தார்களென்பதில்லை. அதிலிருந்தும் ப்ரமாணோபாதானம் பண்ணியேயுள்ளார்கள். ப்ரக்ருதம் நாம் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தையன்றோ அநுபவிக்கிறோம். இதில் (5-6-24.) "ப்ருந்தாவனம் பகவதா க்ருஷ்ணேந அக்லிஷ்ட கர்மணா, சுபேந மநஸா த்யாதம் கவாம் வ்ருத்திம் அபீப்ஸதா." என்கிற ச்லோகத்தில் சிறிது விமர்சம். ப்ருந்தா என்று துலஸிக்குப் பெயரென்றும், துளஸீவனத்தைக் கண்ணன் பசும்புற்காடாக ஆக்கினனென்றும் சிலர் சொல்லுவர்கள். அது தவறு. ப்ருந்தா என்று நெரிஞ்சிக்குப் பெயர். நெரிஞ்சிக் காடாயிருந்ததைப் பசும்புற் காடாகக் கண்ணபிரான் ஆக்கியருளினானென்கை. இவ்விடத்தில் கண்ணனுக்கு அக்லிஷ்ட கர்மணா என்று விசேஷணமிடப்பட்டுள்ளது. சிரமமின்றிக் காரியம் செய்யவல்லவன் என்பது பொருள். ஒவ்வொரு பசுவுக்கும் கன்றுக்கும் தனித்தனியே புல்லும் தண்ணீரும் தேடிக் கொணர்ந்து கொடுப்பதென்பது மிகவும் சிரமமான காரியமாதலால் அத்தகைய சிரமத்திற்கு இடமில்லாதபடி அந்த ஸ்தலம் முழுவதையுமே எளிதாகப் பசும் புற்காடாக ஆக்கிவிட்டானென்றவாறு எப்படியாக்க முடிந்ததென்னில்—[அக்லிஷ்டகர்மணா]பகவான் செய்யும் ஸகலலோக ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதிகளான காரியங்களெல்லாம் கிலேசலேசமுமின்றிக்கே "ஸோகாமயத" என்று உபநிஷத்து ஓதினபடி ஸங்கல்ப மாத்ரத்தாலன்றோ செய்து போருவது. அந்த ஸங்கல்பங்கொண்டே அதுவுஞ் செய்தானென்கை.

திருவாய்மொழி ஈடுமுப்பத்தாறுயிரப்படியில் (மஹாப்ரவேசத்தில்) முந்துற முன்னம் நம்பிள்ளை கையாண்ட ஸம்ஸ்க்ருத ப்ரமாண வசனம் *ப்ருந்தாவனம் பகவதா* என்கிற இந்த ச்லோகமேயாகும். அவ்விடத்து ஸ்ரீஸூக்தி அருமாறு:— "*ப்ருந்தாவநம் பகவதா க்ருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா, சுபேந மநஸாத்யாதம் கவாம் வ்ருத்திமபீப்ஸதா* என்கிறபடியே ஸ்ரீப்ருந்தாவனத்தை *உத்பந்ந நவசஷ்பாட்ய*மென்னும்படி கடாக்ஷித்தாப் போலே தத்வங்களை விசதமாக அறியவல்லராம்படி (ஆழ்வாரைக்) கடாக்ஷித்தான்" என்று. இங்கு இந்த ச்லோகத்தை உபாதானம் பண்ணினதற்குத் திருவுள்ளமென்னென்னில்: இவ்விருள்தருமாஞாலத்திலுள்ள ஸம்ஸாரி சேதநர்களெல்லார்க்கும் தத்வஜ்ஞானத்தையுண்டாக்கி உஜ்ஜீவனம் பண்ணுவிக்கவேணுமென்று திருவுள்ளங்கொண்ட எமபெருமான் இதை அக்லிஷ்டகர்மாவாய்க் கொண்டு செய்யக்கருதி ஆழ்வாரொருவரைக் கடாக்ஷித்து அவர் முகமாக எளிதில் தன் அபேக்ஷிதம் நிறைவேறப் பெற்றானென்பது விவக்ஷிதம் ஆசார்ய ஹ்ருதயத்தில் (96.) "கோவ்ருத்திக்கு நெரிஞ்சியைப் புல்லாக்கினவன் ஜகத்ஹிதார்த்தமாக *எனக்கே நல்லவருள்களென்னும்படி ஸர்வஸௌஹார்த ப்ரஸாதத்தை ஒருமடை செய்து இவரைத் தன்னுக்க லோகமாகத் தம்மைப் போலவாக்கும்படியானார்" என்ற சூர்ணையில் இங்க நத்து விளக்கப்பட்டது. ஊரும் நாடுமுலகமும் ஆழ்வாரைப்போல் பகவத் விஷயப்ரவணமாம்படிக்குறுப்பாக ஆழ்வாரைக் கடாக்ஷித்தருளினது நெரிஞ்சிக்காட்டைப் பசும் புற்காடாக்கினது போல் அநாயாஸமாகச் செய்த காரியமென்று கூறியவாறு.



கண்ணபிரான் *ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாயொளித்து வளர்ந்தது திருவாய்ப்பாடியில். அங்கிருந்து ப்ருந்தாவனம் வருவதற்கு என்ன ப்ரஸக்தியென்பதை ஸ்ரீ விஷ்ணுபுராணம் கொண்டே அறியவேணும். இதில் ஆறுவது அத்யாயத்தில் பூதநா சகடயமலார்ஜுந விபத்துக்கள் நேர்ந்ததைச் சொல்லிவிட்டு *கோபவ்ருத்தாஸ் ததஸ் ஸர்வே நந்தகோபபுரோகமா:, மந்த்ரயாமாஸுருத்விக்நா மஹோத்பாதாதிபீரவ:* என்று தொடங்கி, கோகுலத்தில் வாஸம் மிகவும் ஆபத்துக்கிடமானதென்றும், அங்கிருந்து அருகேயுள்ள ப்ருந்தாவனம் நிரபாயமான ஸ்தலமாகையாலே எல்லோரும் அங்குச்சென்று சேரவேணுமென்று ஆலோசித்ததாகவும் சொல்லி, கோபாலர்களனைவரும் தாமதமின்றி அங்குச் சென்று சேர்ந்ததாகவும்

 

சொல்லியுள்ளது. பிறகுதான் நெரிஞ்சிங் காடானவது பசும்புற் காடாக ஸங்கல்பிக்கப்பட்டதென்று உணர்க. கண்ணபிரானுடைய திவ்ய சேஷ்டிதங்கள் திருவாய்ப்பாடியிலும் ப்ருந்தாவனத்திலுமாக நடைபெற்றவை. நம் ஆசாரியர்கள் "பஞ்சலக்ஷங் குடிப்பெண்கள்" என்று பலகாலும் அருளிச் செய்வதனால் வ்ரஜபூமி வெகுவிஸ்தாரமானது. இப்போது கோகுலம் என்று வழங்கப்பட்டு வருகிற ஸ்வல்ப பாகமேயன்று. நந்தகாம், பர்ஷாணு முதலான வ்ரஜபூமிகள் அபரிமிதமானவை.

க்ருஷ்ண லீலைகளில் சகடபஞ்ஜனமென்பது மொன்று; க்ருஷி முதலான காரியங்களுக்கு இடையர்களின் வீட்டில் வண்டியிருப்பது ஸஹஜம். வண்டியில் ஏணை கட்டி அதில் கண்ணனைப் படுக்கவிட்டு உறங்கப்பண்ணி யசோதை தன் வீட்டுக்காரியங்களைப் பார்ப்பள். ஒரு நாள் நடந்த செய்தியைப் பராசர முனிவர் ஆறுவது அத்யாயத்தின் தொடக்கத்தில் பேசுகின்றார்—"கதாசித் சகடஸ்யாதச் சயாநோ மதுஸூதந:, சிக்ஷேப சரணாவூர்த்வம் ஸ்தந்யார்த்தீ ப்ரருரோத ஹ" இத்யாதி. இதைக்கொண்டே நம் ஆசாரியர்கள் "முலைவரவு தாழ்த்ததனால் சீறி நிமிர்த்த திருவடிகளாலே சகடத்தைச் சாடியருளிற்று" என்றருளிச் செய்துள்ளார்கள். இது நிற்க. கம்ஸன் கண்ணபிரானை நலியப் பல அசுரர்களை ஏவியிருந்தானென்பதுண்டு ஆனால் சகடத்தில் அஸுரன் ஆவேசித்ததாக ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கவில்லை. ஆயினும், நம்மாழ்வார் திருவாய்மொழியில் (6 9-4) "தளர்ந்தும் முறிந்தும் சகடவசுரருடல் வேறுப் பிளந்து வீயத் திருக்காலாண்ட பெருமானே" என்றருளிச் செய்ததனால் சகடாஸுரனென்றே ஒரு ப்ரஸித்தி வந்திருக்கிறது. இப்படியே யமலார்ஜுனத்திலும் அஸுராவேசமிருந்ததாகச் சொல்லப்படவில்லை. ஆயினும் பெரியாழ்வார் (3-1-3) "பொய்ம்மாய மருதான வசுரரை" என்றருளிச் செய்துள்ளார். திருவாய்ப்பாடியில் எழும் பூண்டெல்லாம் அசுரப் பூண்டேயென்பது மங்களாசாஸனபரர்களான ஆழ்வார்களின் அத்யவஸாயம்.

பதின்மூன்றாமத்யாயத்தில் கோவர்த்தநோத்தரணம் பண்ணிக் கோநிரை காத்த கதையைச் சொன்ன பின்பு கண்ணன் ராஸக்ரீடையிலே குதூஹலங் கொண்டது; அதற்காக வேணுகானம் பண்ணினது, உடனே பலபல ஆயர் சிறுமியர் வந்து கூடினது, சில பெண்கள் அந்த கோஷ்டியில் வந்து சேர முடியாமல் தளர்ந்தது, குரவை கோத்த

குழகன் நொடிப் பொழுதில் மறைந்தது, பிரிவாற்ருத கோபிகள் அவனைத் தேடியலைந்து ப்ருந்தாவனமெங்கும் தட்டித்திரிந்தது; மீண்டும் அப்பெருமான் கண்ணுக்கிலக்காகி அப்ரமேயமாக ரமித்தது --என்னுமிவ் விஷயங்கள் [பதின்மூன்ருமத்யாயமொன்றிலே ஸம்க்ஷேபித்துச் சொல்லி முடிக்கப்பட்டன. அநுபவரஸிகர்களுக்கு இவற்றில் ஒவ்வொன்றும் இரண்டு மூன்று அத்யாயங்களாலே நின்று நின்று அநுபவிக்க வேண்டியவை. இவை எதனுலிப்படி ஸம்க்ஷேபிக்கப் பட்டனவோ அறிகின்றிலேன். ராஸக்ரீடையென்பதை ஆழ்வார்கள் குரவைகோத்தாடல் என்று கூறி அடிக்கடி வாய்வெருவுகின்ருர்கள். கூரத்தாழ்வான் தம்முடைய ஸ்தவங்களிலே நினைந்துநைந்து உள்கரைந்துருகுவது ராஸக்ரீடையைப் பற்றியே. இந்த க்ரீடையின் ஸ்வரூபமே பரம விலக்ஷணமானது. கோபிகள் எண்ணிறந்தவர்களாய், கண்ணன் ஒருவனுயிருக்கச் செய்தேயும் தானும் அத்தனை வடிவுகள் கொண்டு ஒவ்வொரு கோபியினிடையிலும் ஒவ்வொரு கண்ணனுகவிருந்து அநுபவித்தப்ரகாரமானது விண்ணின் மீதமரர்கள் விரும்பித்தொழவேண்டும் படியாயிருந்தது.

பகவத்கீதை பதினோராமத்யாயத்தில் கண்ணன் அர்ஜுநனுக்கு விச்வரூபங் காட்டினது பெரிதன்று: ஆசார்யஹ்ருதயத்தில் 'குரவை துவரைகளில் வடிவுகொண்ட சபலனுக்கு'' என்பது அற்புதமானவொரு ஸ்ரீஸூக்தி. அங்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி:-- ''அங்கநாமங்கநாமந்தரே மாதவோ மாதவம் மாதவஞ்சாந்தரேணாங்கநா" என்கிறபடியே திருக்குரவையில் பெண்களோடே அநேக விக்ரஹ பரிக்ரஹம் பண்ணி அநுபவித்தாப் போலவும், "ஏகஸ்மிந்நேவ கோவிந்த: காலே தாஸாம் மஹாமுநே, ஜக்ராஹ விதிவத் பாணீந் ப்ருதக் கேஹேஷு தர்மத:; உவாஸ விப்ர! ஸர்வாஸாம் விச்வரூபதரோ ஹரி:" என்கிறபடியே ஸ்ரீமத் த்வாரகையில் தேவிமாருடனே பதினாறயிரம் விக்ரஹங்கொண்டு அநுபவித்தாப் போலவும்'' என்று. இங்கே ''குரவை துவரைகளில் வடிவு கொண்ட சபலன்'' என்கிற மூல ஸ்ரீஸூக்திக்கு உபயவிபூதியுமீடாகாதன்ருே. முதல் விச்வருபபரிக்ரஹம் ராஸக்ரீடையில்; இரண்டாவது விச்வருபபரிக்ரஹம் நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறு பல்லாயிரமெண்ணிறந்த தேவமாதர்களை மணம்புணர்ந்தகாலத்து. பராசர முனிவர் முப்பத்தோராமத்யாயத்தில் இதனை விரியக் கூறுகின்ருர்;

மேலே யெடுத்துக்காட்டின "ஏகஸ்மிந்நேவ கோவிந்த:" இத்யாதி ச்லோகம் அவ்விடத்தில்தானுள்ளது. தேவேந்திரனுடைய வேண்டு கோளுக்கிணங்கிக் கண்ணபிரான் ஸத்யபாமையோடுங்கூடப் பெரிய திருவடியின் மேலேறி ப்ராக்ஜ்யோதிஷபுரத்திற்கெழுந்தருளி நரகாஸுரனை வதைத்து அந்த அவன் சிறையிலடைத்துவைத்திருந்த பதினாறுயிரத்தொருநூறு தேவகன்னிகைகளைச் சிறைமீட்டுக் கொணர்ந்து த்வாரகையிலே அத்தனை திருமாளிகைகளை யுண்டாக்கி அத்தனை வடிவுகளைக்கொண்டு அத்தனை புரோஹிதர்களைக்கொண்டு தனித்தனியே மணம்புணர்ந்த கதை மிக மநோஹரமானது.

ஸ்ரீராமாவதாரத்தில் "தசவர்ஷஸஹஸ்ராணி தசவர்ஷசதாநி ச, ராமோ ராஜ்யமுபாஸித்வா" என்கிறபடியே பதினோராயிரமாண்டு இந்நிலத்திலெழுந்தருளியிருந்ததறிகிறோம். க்ருஷ்ணாவதாரம் ஒரு நூறாண்டு என்று அறிகிறோம். அந்த ஒரு நூறாண்டினுள்ளும் திருவாய்ப்பாடியிலும் ஸ்ரீப்ருந்தாவனத்திலும் எழுந்தருளியிருந்த சில ஆண்டு களில் செய்த செயல்களே நெஞ்சை நீர்ப்பண்டமாக்குவன. கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் இருபது ச்லோகங்களாலே திருவாய்ப்பாடி லீலைகளையநுபவித்து "ஹா ஜந்ம தாஸ்ய விகதாஸ்ய மயா நலப்தம் ராஸே த்வயா ரவிரஹிதா: கில கோபகந்யா:, யாஸ் தாவகீந பதபங்க்தி ஜுஷோ ஜுஷந்த நிக்ஷிப்ய தத்ர நிஜமங்க மநங்கதப்தம்" என்றருளிய வொரு ச்லோகத்தை வாழ்நாளுள்ளவளவும் அல்லுநன் பகலுமிடைவீடின்றி யநுபவித்தாலும் ஆராது. ராஸக்ரீடையினன்று கண்ணனைப் பிரிந்த கோபிகள் யமுனைக்கரையின் மணல்களிலே விழுந்து புரண்டார்களென்கிறது இதில். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. வானமாமலை சின்ன கலியன் ஸ்வாமி வடநாட்டுத்திருப்பதி யாத்திரையில் ப்ருந்தாவனத்தில் எழுந்தருளியிருந்த காலத்து இந்த ஆழ்வான் ஸ்ரீஸூக்தியைப் பலகாலுமநுஸந்தித்து, சிஷ்ய மண்டலீ பரிவ்ருதராய் யமுனையாற்றங்கரைக்கெழுந்தருளித் தம்முடன் வந்தவர்களெல்லாரையும் ஓரிடத்திலே நிறுத்தித் தாம் வெகுதூரமெழுந்தருளித் திருவரையில் காஷாயத்தையும் களைந்திட்டு இரண்டு நாழிகைப்போது அந்த மணல்களிலே புரண்டருளினரென்று கேட்டிருக்கை. ஸ்ரீக்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களைப் பராசர மஹர்ஷியநுபவித்தது குளப்படியாய், பெரியாழ்வாரநுபவித்தது பெருங்கடலாயிருக்கு மென்பர் பெரியோர். ஸ்ரீ விஷ்ணு புராணநுபவம் முற்றிற்று.

65 திருநாவாய். (இருவர் பாடல்) நம்மாழ் திருவாய் 9—8 *அறுக்கும் வினை பதிகம். திருமங்கை பெ-தி. 6—8—3 *தூவாய....நாவாயுளானை. 10—1—9 *கம்பமாகளிறு....காண்டும் நாவாயுளே.

66 திருவல்லவாழ் (இருவர்பாடல்) நம்மாழ் திருவாய் 5—9 *மானேய் நோக்கு-பதிகம். திருமங்கை பெ-தி. 9—7 *தந்தைதாய் மக்களே-பதிகம். பெரிய மடல் *வல்லவாழ்ப்பின்னை மணாளனை.

67 திருவண்வண்டூர் (ஒருவர்பாடல்) நம்மாழ் திருவாய் 6-1 *வைகல் பூங்கழிவாய்-பதிகம்.

68 திருவாட்டாறு (ஒருவர் பாடல்) நம்மாழ் திருவாய் 10—6 *அருள்பெறுவார்-பதிகம்.

69 திருவித்துவக்கோடு (ஒருவர் பாடல்) குலசேகரர் பெரு-தி. 5 *தருதுயரம் 10.

70 திருக்கடித்தானம (ஒருவர் பாடல்) நம்மாழ் திருவாய் 8—6 *எல்லியுங் காலை பதிகம்.

71 திருவாறன்விளை (ஒருவர் பாடல்) நம்மாழ் திருவாய் 7-10 *இன்பம் பயக்க-பதிகம்.

மலைநாட்டுத் திருப்பதிகளுக்குப் பாடல் குறிப்பு முற்றிற்று.

## நடுநாட்டுத் திருப்பதிகளிரண்டுக்கும் பாடல் குறிப்பு

72 திருவயிந்திரபுரம் (ஒருவர் பாடல்) திருமங்கை பெ-தி. 3-1 *இருந்தண்மா நிலம் பதிகம்.

73 திருக்கோவலூர் (மூவர் பாடல்) பொய்கை 77 *வேங்கடமும்....நீள் கோவல். 86 *தீயுந் திருமகளும்....காமருபூங்கோவல் பூதத்தார் 70 *தமருள்ளம் தஞ்சை....மாமலைக்கோவல். *திருமங்கை

பெ-தி. 2—4—1 ×அன்றுயர்_தடந்திகழ் கோவல்நகர். 2-10 ×மஞ்சாடு வரையேழும் பதிகம். 5—6—7 ×சிந்தனையை —— கொந்தணைந்த பொழிற்கோவல். 7—3—2 ×தாய் நினைந்த...... மதிட்கோவலிடைகழி யாயனை. 7—10—4 ×பேய்முலைத்தலை . மாயனை மதிட்கோவலிடைகழி, சிறியமடல் ×சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே. பெரியமடல் ×கோவலூர் மன்னுமிடைகழி. திருநெடுந் 6 ×அலம்புரிந்த_பொன் விளக்கும் பொய்கை வேலிப் பூங்கோவலூர். 7 ×வற்புடைய - -- பூங் கோவலூர் தொழுதும். 11 ×பொங்கார் — தண்கோவலூர் பாடியாட.

நடுநாட்டுத் திருப்பதிப் பாடல் குறிப்பு முற்றிற்று.



## தொண்டை நாட்டுத் திருப்பதிகளுக்கு ஆழ்வார் பாடல் குறிப்பு

74 திருக்கச்சி யத்திகிரி (இருவர் பாடல்) பூதத்தாழ்வார் 95 என்னெஞ்சமேயான் – உலகேத்து மாழியா னத்தியூரான். 96 ×அத்தி யூரான் புள்ளையூர்வான் திருமங்கை பெ-தி. 2 9—3 ×உரந்தரு .... வரந்தரு மாமணிவண்ணனிடம். (விசேஷக் குறிப்பு: காஞ்சீ என்னும் வடமொழிப் பெயர்க்குத் திரிபான கச்சியென்னுஞ் சொல் நான்முகக்கடவுளாராதித்த இடமான அத்திகிரியையே சொல்லக்கடவதாதலால் கச்சியென வருமிடங்களிலெல்லாம் இத்தலத்திற்கு மங்களாசாஸனமாகவே கொள்ளத்தகும்.

75 அட்டபுயகரம் (இருவர் பாடல்) பேயார் 99 ×தொட்ட படை—அட்டபுயகரத்தான். திருமங்கை பெ-தி. 1—8—5 ×வண்கையா னவுணர்க்கு -- எண்கையான். 2—8 ×திரிபுர மூன்று-பதிகம். பெரிய மடல் ×அட்டபுயகரத்தெம்மானேற்றை.

76 திருத்தண்கா (ஒருவர் பாடல்) திருமங்கை பெ-தி 10 1—2 ×பொன்னை மாமணியை .. யாஞ்சென்று காண்டும் தண்காவிலே ×திரு நெடுந் 14 ×முளைக்கதிரை .. —... விளக்கொளியை மரதகத்தைத் திருத் தண்காவில்

77 வேளுக்கை (இருவர் பாடல்) பேயார் 23 ×சிறந்தவென் வேளுக்கைப்பாடியுமே. 34 ×அன்றிவ்வுலகம் ..வேளுக்கை நீணகர்வாய்

62 ×விண்ணகரம் வெஃகா ... ... மாமாட வேளுக்கை திருமங்கை பெரிய் மடல் ×மன்னுமதிட்கச்சி வேளுக்கையாளரியை.

78 பாடகம் (ஐவர் பாடல்) பூதத்தார் 64 ×உற்று வணங்கி .. பூம்பாடகத்துளிருந்தானை. பேயார் 30 ×சேர்ந்த திருமால்_வாய்ந்த மறை பாடகம். 64 ×இசைந்த வரவமும் . கச்சியிருந்து. திருமழிசை திருச்சந்த 63 ×நன்றிருந்து.......குன்றிருந்த மாடநீடு பாடகத்தும். 64 நின்றதெந்தை .. ... இருந்ததெந்தை பாடகத்து, நம்மாழ் திருவாய் 5-10-6 ×நின்றவாறும் இருந்தவாறும். திருமங்கை பெ-தி. 6—10—4 ×கல்லார்மதிள்... கச்சிநகருள் நச்சிப்பாடகத்துள். திருநெடுந் 15 ×கல் லுயர்ந்த... – கச்சிமேய களிறு.

79 நீரகம் (ஒருவர் பாடல்) திருமங்கை திருநெடுந் 8 நீரகத்தாய்

80 நிலாத்திங்கள்துண்டம் (ஒருவர்பாடல்) திருமங்கை திருநெடுந் 8 நீரகத்தாய் _ நிலாத்திங்கள் துண்டத்தாய்.

81 ஊரகம் (நால்வர் பாடல்) பேயார் 64 ×இசைந்த வரவமும்...... கச்சி நின்றது. திருமழிசை திருச்சந் 63 ×நன்றிருந்து......... ஊரகத்து நின்று. நம்மாழ் திருவாய் 5—10—6 நின்றவாறும். திருமங்கை பெ-தி. 1—5—4 ×ஊரான். சிறியமடல் ×மதிள்கச்சி யூரகமே. பெரியமடல் ×ஊரகத்து ளன்னவனை. திருநெடுந் 8 நீரகத்தாய்... கச்சி யூரகத்தாய். 13 ×கல்லெடுத்து ......கச்சியூரகத்தாய்.

82 திருவெஃகா (ஐவர் பாடல்) பொய்கை 77 ×வேங்கடமும் ....__வெஃகாவும். பேயார் 26 சிறந்தவென் ...வெஃகாவும். 34 ×அன் றிவ்வுலகம் - கிடந்தானை. 62 ×விண்ணகரம் வெஃகா. 64 ×இசைந்த வரவமும் — கச்சிவெஃகாவில். 7 ×பொருப்பிடையே ....விருப்புடைய வெஃகாவே. திருமழிசை திருச்சந் 63. ×நன்றிருந்து ... ... வெஃகணைக் கிடந்தது. 64 நின்றதெந்தை ... ....வெஃகணைக்கிடந்தது. நான்முகன் 36 நாகத்தணை....வெஃகா. நம்மாழ் திருவி-26 ×நானிலம் _ கண்ணன் வெஃகாவுது. திருவாய் 5—10—6 ×நின்றவாறும்...... கிடந்தவாறும். ×திருமங்கை பெ-தி. 2—6—5 ×பிச்சச்சிறு ... கச்சிக்கிடந்தவன். 10-1-7 ×கூந்தலார் ... – சென்று காண்டும் வெஃகாவுளே. சிறியமடல் ×பேரா மருது....வெஃகாவே. பெரியமடல் ×வெஃகாவிலுன்னிய யோகத்துறக்

கத்தை. திருநெடுந் 8 ×நீரகத்தாய்......வெஃகாவுள்ளாய். 9 ×வங்கத் தால்.........மதிட்கச்சியூராய். 13 ×கல்லெடுத்து—...வெஃகாவில் துயி லமர்ந்த. 14 ×முளைக்கதிரை......வெஃகாவில் திருமாலை.

83 காரகம் (ஒருவர்பாடல்) திருமங்கை திருநெடுந்8× நீரகத்தாய்

84 கார்வானம் (ஒருவர் பாடல்) திருமங் திருநெ 8 ×நீரகத்... கார்வானத்துள்ளாய்.

85 கள்வனூர் (ஒருவர் பாடல்) திருமங் திருநெடு 8 ×நீரகத்.... கள்வா.

86 பவளவண்ணம் (ஒருவர்பாடல்) திருமங்கை திருநெடுந் 9 ×வங்கத்தால்...பவளவண்ணா.

87 பரமேச்சுர விண்ணகரம் (ஒருவர் பாடல்) திரு மங் பெ-தி 2—9 ×சொல்லுவன்-பதிகம்.

88 திருப்புட்குழி (ஒருவர் பாடல்) திருமங் பெ-தி. 2—7—8 ×அலங்கெழு—புட்குழிபாடும். பெரியமடல் ×புட்குழியெம் போரேற்றை.

89 திருநின்றவூர் (ஒருவர் பாடல்) திருமங் பெ-தி. 2—5—2 ×பூண்டவத்தம்...நின்றவூர் நித்திலத்தை 7—10—5 ×ஏற்றினை யிம யத்துள்... நின்றவூர் நின்ற நித்திலத் தொத்தினை.

90 திருவெவ்வுள் (இருவர் பாடல்) திருமழிசை நான்மு 36 ×நாகத்தணை.....திருவெவ்வுள். திருமங் பெ-தி. 2—2 ×காசையாடை-பதிகம். பெரியமடல் ×என்னுடைய வின்னமுதை யெவ்வுள்பெருமலையை

91 திருநீர்மலை (இருவர்பாடல்) பூதத்தார் 46×பயின்றதரங்கம் ...அணி நீர்மலையே. திருமங் பெ-தி 2—4 ×அன்றுயர்-பதிகம். 2-7-8 அலங்கெழு ...... போதுமோ நீர்மலைக்கு. 5—2—8 ×கலைவாழ். திருநீர் மலை வார்எந்தை. 6—8—4 ×ஓடாவரியாய் திருநீர்மலையானை. 7-1-7 ×கதியேலில்லை......திருநீர்மலை நித்திலத்தொத்தே. 8—2—3 ×அருவி சோர்......நீர்மலையென்று. 9—2—8 ×மஞ்சுயர் மாமதி தீண்ட.....நீர் மலையார்கொல். 10—1—1 ×ஒருநல்...நீர்மலை யின்றுபோய். சிறிய

மடல் ×ஏரார்பொழில் ...... நீர்மலை. பெரியமடல் ×நீர்மலைமேல். திருநெடுந். 18 ×கார்வண்ணம் ...... நீர்வண்ணன் நீர்மலைக்கே.

92. திருவிடவெந்தை. (ஒருவர் பாடல்) திருமங். பெ-தி. 1-8-4 ×பார்த்தற்காயன்று...... இடவெந்தை மேவிய வெம்பிரான். 2-7 ×திவளும்வெண்மதி-பதிகம். சிறியமடல் ×ஏரார்பொழில் சூழிடவெந்தை. பெரியமடல் ×என்மனத்து மாலையிட வெந்தையீசனை.

93 திருக்கடன்மல்லை (இருவர் பாடல்) பூதத்தார். 70 ×தமருள்ளம் தஞ்சை...... மாமல்லை. திருமங் பெ-தி. 2—5 ×பாராயதுண்டு-மதிகம். 2—6 ×நண்ணாதவாள்-பதிகம். 3—5—8 ×சங்குதங்கு தடங்கடல் கடன்மல்லையுள் கிடந்தாய். 7—1—4 ×புள்வாய் பிளந்த...கடன்மல்லைக்கிடந்த கரும்பே. திருக்குறு. 19 ×பிண்டியார்....மல்லை யென்று மண்டினார். சிறியமடல் ×காரார் குடந்தை கடிகைகடன்மல்லை. பெரியமடல் ×மன்னுங் கடன்மல்லை மாயவனை. திருநெடு. 9 ×வங்கத்தால் மாமணி வந்துந்து முந்நீர் மல்லையாய்.

94 திருவல்லிக்கேணி. (மூவர் பாடல்) பேயார் 16 ×வந்துதைத்த ...... திருவல்லிக்கேணியான் சென்று. திருமழிசை. நான்மு 35 ×தாளாலுலகம்...மாமயிலை மாவல்லிக்கேணியான், ×திருமங்கை பெ-தி 2—3 ×விற்பெரு விழவும்-பதிகம்.

95 திருக்கடிகை. (இருவர் பாடல்) பேயார் 61 ×பண்டெல்லாம் ...... வண்பூங்கடிகை. திருமங். பெ-தி, 8—9—4 மிக்கானை....தக்கானைக் கடிகை. 8—9—9 ×கண்ணார் கண்ணபுரம் கடிகை, சிறியமடல் ×காரார் குடந்தை கடிகை.

தொண்டை நாட்டுத் திருப்பதிகட்குப் பாடல் குறிப்பு முற்றிற்று.

## வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டுக்கும் ஆழ்வார் பாடல் குறிப்பு (மிகச் சுருக்கமாக)

96 திருவேங்கடம். தொண்டரடிப்பொடியாழ்வா ரொருவர் நீங்கலாக மற்ற ஒன்பது ஆழ்வார்களாலும் ஆண்டாளாலும் பாடப்

பெற்றது. பதிகம் பாடினவர்கள் நம்மாழ்வார் (இரண்டு பதிகங்கள்) குலசேகராழ்வார்—ஒரு பதிகம். திருமங்கை—நான்கு.

97 சிங்கவேள்குன்றம் (ஒருவர் பாடல்) திருமங்கை—பதிகம். பெ-தி. 1—7 அங்கண் ஞாலமஞ்ச.

98 அயோத்தி (இருவர்பாடல்) பெரியாழ்வார், குலசேகராழ்வார்

99 நைமிசாரணியம் (ஒருவர் பாடல்) திருமங்கை-பதிகம் 1 வாணிலாமுறுவல்.

100 சாளக்கிராமம் (இருவர் பாடல்) பெரியாழ்வார்-துணுக்கை திருமங்கை 10 ×கலையுங் கரியும்.

101 வதரியாச்சிரமம் (இருவர்பாடல்) பெரியாழ்வார்-துணுக்கை திருமங்கை 20 ×முற்றமூத்து ×ஏனமுனாகி.

102 கண்டமென்னுங் கடிநகர் (ஒருவர் பாடல்) பெரியாழ்வார் 10 தங்கையை

103 பிருதி (ஒருவர்பாடல்) திருமங்கை-பதிகம் 1 வாலிமாவலம்

104 வடமதுரை (மூவர்பாடல்) நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள்.

105 துவாரகை (இருவர்பாடல்) பெரியாழ்வார், ஆண்டாள்.

106 திருவாய்ப்பாடி ஆண்டாள்.

107 திருப்பாற்கடல் பெரியாழ்வார் ×தடிக்கடலே தனிச்சுடரே.

108 திருநாடு ,, ,,

வடநாட்டுத் திருப்பதிகளின் பாடல் குறிப்புச் சுருக்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்

எழுதிய

## நூற்றெட்டுத் திருப்பதி பாடல் குறிப்பு

பூர்த்திபெற்றது.

ஸ்ரீரஸ்து

ஸ்ரீ ஹஸ்திசைலசிகரோஜ்ஜ்வலபாரிஜாதாய நம:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் **அண்ணங்கராசார்ய தாஸன்**

தனது தொண்ணூறுவது பிராயப்பூர்த்தி நினைவுமலராக எழுதிய

# பூர்வாசார்ய ஸ்தோத்ர நூல்களில் ஆழ்வார்களநுபவம்

Released by Maran's Dog ,Toronto, Canada

(ச்லோ.) லோகோபகாரகக்ருதீர் பூயஸீர் விகதஸ் ஸதா.
அண்ணங்கரார்யதாஸஸ்ய க்ருதிரேஷா விஜ்ரும்பதாம்.
நவதிதமவர்ஷபூர்த்தேஸ் ஸுசிரஸ்ம்ருதயே விலிக்யமாநைஷா,
க்ருதிரத்புதார்த்தபரிதா ஜீயாதாசந்த்ரதாரகம் புவநே.
நாதமுநி யாமுநார்ய ஸ்ரீபாஷ்யக்ருதாதிபூர்வகுருக்ருதிஷு,
த்ராமிடச்ருதிப்ரசம்ஸாதத்பரஸூக்தீ: ப்ரதர்ச்ய விவ்ருணோமி.



ஸ்ரீமந் நாதமுனிகள், ஆளவந்தார், எம்பெருமானார், கூரத்தாழ்வான், பட்டர், வேதாந்த தேசிகன், மணவாளமாமுனிகள், அபிராமவராசார்யர் ஆகிய எண்மருடைய ஸம்ஸ்க்ருத ஸூக்திகளில் ஆழ்வார்களுடையவும் அவர்களது ஸ்ரீ ஸூக்திகளுடையவும் ப்ரசம்ஸைகளுள்ள விடங்களை உதாஹரித்து உரையிடுவது இந்நூல்........ .... *

## 1. ஸ்ரீமந்நாதமுனிகளின் முக்தகம்.

### (திருவாய்மொழித் தனியன்)

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோபவாங்மயம்,
ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்.

(உரை) அஹம் த்ராவிடவேதஸாகரம் நமாமி—தமிழ்மறையென்னுங் கடலை அடியேன் வணங்குகிறேன். *பக்தாம்ருத மித்யாதி விசேஷ

Released by Maran's Dog ,Toronto, Canada

ணங்கள் திருவாய்மொழிக்குக் கடலோடு ஸாம்யத்தை நிர்வஹிப்பவை. [பக்தாம்ருதம்] *அலைகடல் கடைந்து .... விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே* என்றபடி பக்தர்களுக்கு அமுதமளித்தது கடல். (பக்த) என்ற பதத்திற்கு அடைவிக்கப்பட்டவென்று பொருள்கொள்க. திருவாய்மொழி பக்ஷத்தில் *தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகள் சொன்னேன்* என்றபடி பக்தர்களுக்கு அம்ருதமாயிருப்பதென்கை. [விச்வஜநாநுமோதநம்] கடல் எப்படிப்பட்டவர்களுக்கும் மகிழ்ச்சியளிக்கும். கடலைக்காண விரும்பாதவர்களில்லை. திருவாய்மொழியானது *பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவுமாயிரம்* என்றும், *கேட்டு ஆரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே* என்றும், *பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத்தான் பாடித் தென்னாவென்னுமென்னம்மான்* என்றும், *ஏர்விலாவென்னைத் தன்னாக்கியென்னால் தன்னைப் பார்பரவின் கவிபாடும் பரமரே* என்றும் ஆழ்வார் தாமே பேசும்படி ஸர்வேச்வரனுட்பட உபய விபூதியிலுள்ளார்க்கும் பரமபோக்யமானது. [ஸர்வார்த்ததம்] கடல் ரத்நாகரமாகையாலே ஸகலப் பொருள்களையும் கொடுக்கவல்லது. திருவாய்மொழியோ வென்னில் *மிக்கவிறை நிலையும் மெய்யாமுயிர் நிலையும் தக்கநெறியும் தடையாகித் தொக்கியலுமூழ்வினையும் வாழ் வினையுமோதும் குருகையர் கோன்யாழினிசை வேதத்தியல்* என்ற திருவாய்மொழித் தனியன்படி அறியவேண்டுமர்த்தங்களையெல்லாம் காட்டித்தரவல்லது. [ஸ்ரீ சடகோபவாங்மயம்] கடலானது *விஷ்வகாசாந்தஸிந்தோ: கும்பீ ஸம்பூதோ:* என்ற பாதுகாஸஹஸ்ர ஸூக்தியின்படி அகத்தியமுனிவரின் வாங்மயமானது. திருவாய்மொழியானது குருகூர்ச் சடகோபமுனிவரின் திருவாக்கு. [ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம்]கடலானது பற்பல நதிகளுக்குப் புகலிடமாகையாலே வெள்ளத்தினால் பெயர்க்கப்பட்ட பல்லாயிரம் மரங்களின் சாகைகளினுடைய ஸமாகமத்தையுடையது. திருவாய்மொழியோவென்னில் ஸஹஸ்ர சாகைகளையுடைத்தான ஸாமவேதத்திற்கு ஸமமான சாஸ்த்ரமாயிருக்கும். ஆசார்ய ஹ்ருதயத்தில் *சந்தோகனென்று ஸாமாந்யமாகாமல்.... இத்தைச் சாந்தோக்ய ஸமமென்பர்கள்* என்ற சூர்ணையின் வியாக்கியானம் ஸேவிப்பது. ஆக, இப்படிப்பட்ட த்ராவிட வேத ஸாகரத்தை ஸேவிக்கிறேனென்றதாயிற்று. .... .... .... * *

## ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நம்—சுலோகம்-5.

மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுலாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகலம் ப்ரணமாமி மூர்த்நா.

* * *—கீழ் நான்காவது சுலோகத்தில் போற்றப்பட்ட பராசரருடைய க்ரந்தத்தைவிட பரமபோக்யமும் பரமோஜ்ஜீவநமும் பரமோபகாரகமும் பலபடிகளாலும் நிகரற்றதுமான திருவாய்மொழி முதலிய திவ்யப் பிரபந்தங்களை அருளிச் செய்தவநும், ஸ்ரீமந்நாதமுனிகளுக்கும் யோகதசையில் ஸேவை ஸாதித்து நேரில் ஸகலோபநிஷத்ஸாரார்த்தங்களை உபதேசித்தவரும், ப்ரபந்நஜநகூடஸ்தருமான நம்மாழ்வாரை நமஸ்கரிக்கின்றார் இதில். "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய் தந்தையும் அவரேயினியாவாரே" [திருவாய்மொழி-5—1—8] என்று ஆழ்வார்க்கு மாதாபிதாக்கள் முதலிய எல்லா உறவுமுறையாரும் எம்பெருமானேயானதுபோல் ஸ்ரீவைஷ்ணவர்கட்கெல்லாம் ஆழ்வார் திருவடிகளே ஸர்வஸ்வமாகிறதென்று அருளிச் செய்கிற இவருடைய அத்யவஸாயத்தை என் சொல்வோம்? நம்மாழ்வார்க்குப் பல திருநாமங்களிருக்கவும், அவற்றையெல்லாம் விட்டு "ஆத்யஸ்ய ந: குலபதே:" என்று—'நம்முடைய குலத்துக்குத் தலைவர் என்று அருளிச்செய்யும்படியான திருவுள்ளக்கனிவு விலக்ஷணமானதே. 'விப்ரர்க்கு கோத்ரசரணஸூத்ர கூடஸ்தர் பராசர பாராசர்ய போதாயநாதிகள்; ப்ரபந்நஜநகூடஸ்தர் பராங்குச பரகாலயதிவராதிகள்" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸூக்தி இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

மதந்வயாநாம் என்கிற பதத்தினால் தமக்கு முன்னே அவதரித்திருந்த பெரியோர்களும், தமக்குப்பிறகு ஜனிக்கின்ற, ஜனிக்கப் போகிற ஸ்ரீவைஷ்ணவ ஸந்தாநங்களும் விவக்ஷிதம். ஸ்ரீவைஷ்ணவர்களென்று பேர்பெற்ற அனைவர்க்கும் ஆழ்வார் திருவடிகளே ஸர்வஸ்வம் என்றதாயிற்று. .... .... .... .... *

ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நம்—சுலோ. 26.

நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே
மஹேச! ஹாதும் தவ பாதபங்கஜம்,
ருஷா நிரஸ்தோபி சிசு: ஸ்தநந்தய:
ந ஜாது மாதுச் சரணௌ ஜிஹாஸதி.

எம்பெருமானே! என்னை நீ விலக்கித் தள்ளினாலும் நான் உன் திருவடிகளை விட்டு அகல்வேனல்லேன்; முலையுண்கிற குழந்தையைத் தாயானவள் முன்கோபத்தினால் சீறித் தள்ளிவிட்டாலும் அக்குழந்தை பின்னையும் தாயின் காலையே கட்டிக்கொண்டு அழுமேயல்லது அகன்று போய்விடமாட்டாது; அது போலவே, என்னை நீ நெறிகாட்டி நீக்கப் பார்த்தாலும் நான் உன் திருவடிகளை விட்டு நீங்குவேனல்லேன்" என்று தம்முடைய திண்ணிய உறுதியை உரைத்தாராயிற்று. ஹாது மிச்சதி—ஜிஹாஸதி. "தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை....அரிசினத்தாலீன்ற தாய் அகற்றிடினும் மற்றவள் தனருள் நினைந்தே அழுங்குழவியதுவே போன்றிருந்தேனே" என்ற ஸ்ரீகுல சேகராழ்வார் பாசுரத்தைப் பெரும்பாலும் தழுவி இந்த ச்லோகமருளிச் செய்யப்பட்டது. .... .... .... .... *

ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நம்—சுலோ. 31

31 கதாபுநச் சங்கரதாங்க் கல்பக
த்வஜாரவிந்தாங்குச வஜ்ரலாஞ்சநம்,
த்ரிவிக்ரம! த்வச்சரணம்புஜத்வயம்
மதீயமூர்த்தாந மலங்கரிஷ்யதி. 31

திருவாய்மொழியில் ஆழ்வார் "நீ ஒரு நாள் படிக்களவாக நிமிர்த்த நின் பாதபங்கயமே தலைக்கணியாய்" என்றும், "கோலமா மென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே" என்றும், "அடிச்சியோந்தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணாவுன் கோலப்பாதம்" என்றும் விரும்பினபடியே உன் திருவடிகளாலே என் தலையை அலங்கரிப்பது எப்போதோவென்கிறார். .... .... .... *

40 நிவாஸ சய்யாஸநபாதுகாம்சுக
உபதாநவர்ஷாதபவாரணாதிபி:,
சரீரபேதைஸ் தவ சேஷதாம் கதை:
யதோசிதம் சேஷ இதீரிதே ஜநை:

'சென்றால்குடையாம் இருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள் கடலுள்—என்றும் புணையாமணி விளக்காம் பூம்பட்டாம் புல்கும், அணையாம் திருமாற்கு அரவு" என்ற முதல் திருவந்தாதிப் பாசுரத்தையே இந்த ச்லோகமாக மொழிபெயர்த்தனர். •

ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நம்—சுலோ. 52, 53.

52 வபுராதிஷு போபிகோபிவா
குணதோஸாநி யதாததாவித:,
ததயம் தவ பாதபத்மயோ:
அஹமத்யைவ மயா ஸமர்ப்பித:.

ஆத்மாவைப் பற்றிப் பலர் பலவகையாகச் சொல்வர்கள்; தேஹமே ஆத்மா என்பர் சிலர்; மற்றுஞ் சிலர் இந்திரியமே ஆத்மா என்பர்; வேறு சிலர் அந்த:கரணமே ஆத்மா என்பர்; ப்ராணமே ஆத்மா என்பர் சிலர்; புத்தியே ஆத்மா என்பர் மற்றையோர்; இவை ஒன்றுமல்ல; இவற்றிற்காட்டில் அஹமர்த்தமான ஆத்மா வேறுபட்ட வஸ்து என்பதை இவர்தாம் ஸித்தித்ரயமென்னும் திவ்யக்ரந்தத்திலே நிலைநாட்டியிருந்தாலும் இங்கே அந்த விசாரம் வைத்துக்கொள்ளாமல், ஆத்மா என்பது தேஹம் முதலானவற்றுள் ஏதுவாக இருந்தாலுமிருக்கட்டும் என்று சரக்கறச் சொல்லுகிறார்; எதுக்காகவென்னில்; ஆத்மாவுக்கு சேஷத்வ ஸ்தாபநமொன்றே முக்கியம் என்கிற தற்கால நோக்கத்தை வெளியிடுதற்காக. "யோஹமஸ்மி ஸஸந் யஜே" என்று வேதபுருஷனும் சொல்லிவைத்தான்; "நான் எவனாகிலுமாகிறேன்; தேஹமாகவோ இந்த்ரியமாகவோ மற்றும் ஏதேனுமாகவோ அஹமர்த்தமாகவோ உண்மையில் எவனாக இருக்கிறேனோ அவனாகவேயிருந்துகொண்டு பகவானை ஆராதிக்கின்றேன்" என்பது அந்த வேத வாக்கியத்தின் பொருள்: அப்படியே இவரும் அருளிச்செய்கிறார். குணத: யதாததாவித: அஸாநி=ஆத்மா அணுவா ஸர்வவ்யாபியா? நித்திய வஸ்துவா நச்வரவஸ்துவா? ஏகரூபனா பரிணாமியா? ஜ்ஞாநியா அஜ்ஞனா? என்றிப்படி ஆத்ம குணங்களில் பலவகை விப்ரதிபத்திகளுண்டு; இதுதன்னிலும் இப்போது நிஷ்கர்ஷிக்கப் புகுகின்றிலேன் என்கிறார். எம்பெருமானே! உனது திருவுள்ளத்தால் இவ்வாத்ம வஸ்து எப்படிப்பட்ட ஸ்வரூப ஸ்வபாவங்களை யுடையதாகக் கொள்ளப் படுகிறதோ அப்படிப்பட்ட ஸ்வரூபஸ்வபாவ விசிஷ்டமாகவேயுள்ள இவ்வஸ்து உன் திருவடிகளில் அடியேனால் ஸமர்ப்பிக்கப்பட்டதாயிற்றுக்காண் என்றாராயிற்று. [மேல் சுலோகத்தோடு முடிவு.]

53. மம நாத! யதஸ்தி யோஸ்ம்யஹம்
ஸகலம் தத்தி தவைவ மாதவ,
நியதஸ்வமிதி ப்ரபுத்ததீ:
அதவா கிந்நு ஸமர்ப்பயாமி தே.

* * *— கீழ் ச்லோகத்தில் அஹமத்யைவ மயா ஸமர்ப்பித: என்று சொன்னதைத் தாமே மறுபடியும் ஆராய்ந்தார்; ஐயோ! என்ன சொன்னோம்! என்ன சொன்னோம்!!' என்று நடுங்கி, அதற்கு அநுதபிக்கின்றமைதோற்ற இந்த ச்லோகமருளிச்செய்கிறார். "மயா அஹம் ஸமர்ப்பித." என்று சொன்னேனே; இப்படி சொல்வதற்கு எனக்கு என்ன அதிகாரமுள்ளது? நான் என்கிற வஸ்துவும் என்னுடையது என்கிற ஒரு வஸ்துவும் ஸ்வதந்த்ரமாகவுண்டோ? "யானே நீ என்னுடைமையும் நீயே" என்றபடி எல்லாம் ஏற்கனவே உன்னுடையதாகவேயிருக்கும்போது, இந்த ஆத்மவஸ்து உனக்கு இல்லாதது போலவும் இப்போதுதான் புதிதாக என்னால் ஸமர்ப்பிக்கப்படுவது போலவும் பேசிவிட்டேனே பாவியேன்; ஸமர்ப்பிப்பதற்கு நானார்? ஸமர்ப்பிக்க என்னிடம் என்ன இருக்கிறது! அதிலும் உனக்கு ஸமர்ப்பிக்க என்ன இருக்கிறது? இவ்விஷயங்களை ஆராயாமல்தானே அவிவேகியாய் 'அஹமத்யைவ மயா ஸமர்ப்பித:' என்று பிசகாகப் பேசிவிட்டேனே! என்று அநுதாபங்காட்டி அருளிச் செய்தாராயிற்று. திருவாய்மொழியில் *"எனதாவிதந்தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே" என்று அருளிச்செய்த ஆழ்வார் உடனே ஆராய்ந்து தெளிந்து, "எனதாவியாவியும் நீ பொழிலேழுமுண்ட வெந்தாய்!, எனதாவி யார் யானார் தந்த நீ கொண்டாக்கினையே" என்றருளிச் செய்ததை அடியொற்றியதாம் இந்த ச்லோகமிரண்டும். .... *



56 ஸக்ருத்த்வதாகாரவிலோகநாசயா
த்ருணீக்ருதாநுத்தமபுக்திமுக்திபி:,
மஹாத்மபிர்மாமவலோக்யதாம் நய
க்ஷணேபி தே யத்விரஹோதிதுஸ்ஸஹ:.

சில மஹாத்மாக்களால் அடியேன் கடாக்ஷிக்கப் பெறவேணும்; எந்த மஹாத்மாக்களாலென்னில்; உன்னுடைய திருமேனியை ஒரு காலாகிலும் ஸேவிக்கப்பெற்றால் போதும் என விரும்பி, 'ஐச்வரியமும் வேண்டா, ஸ்வர்க்காநுபவாதிகளும் வேண்டா, மோக்ஷஸாம்ராஜ்ய

மும் வேண்டா, என்று எல்லாவற்றையும் த்ருணமாக நினைத்து உதறித் தள்ளுபவர்கள் எவரோ, எவர்களை விட்டுப் பிரிந்து ஒரு நொடிப் பொழுதும் நீ தரிக்கமாட்டாயோ, அப்படிப்பட்ட மஹாத்மாக்களின் கடாக்ஷத்திற்கு நான் இலக்காகும்படி செய்தருளவேணுமென்றுராயிற்று. "கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய், ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே" என்றாற்போலே ப்ரார்த்தியா தொழிந்தது, "இந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன்" "எம்மாவீட்டுத் திறமும் செப்பம்" "வானாளும் மாமதி போல் வெண்குடைக்கீழ் மன்னவர் தம், கோனாகிவீற்றிருந்து கொண்டாடுஞ் செல்வறியேன்" "கம்பமதயானைக்கழுத்தகத்தின் மேலிருந்து இன்பமருஞ் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்"என்றும் புக்திமுக்திகளெல்லாவற்றையும் வெறுத்த ஆழ்வார்களின் கடாக்ஷம் பெறுகைக்கு ஆசைப்பட்டாராயிற்று. "க்ஷணேபி தே யத்விரஹோதி துஸ்ஸஹ:" என்ற நான்கா படிக்குச்சேர, "அருமாமாயத்தெனதுயிரே மனமே வாக்கே கருமமே, ஒரு மாநொடியும் பிரியான் என்னூழி முதல்வனொருவனே" என்ற ஆழ்வார் பாசுரம் அநுஸந்தேயம். .... ■

57 ந தேஹம் ந ப்ராணந் நச ஸுகமசேஷாபிலஷிதம்
ந சாத்மாநம் நாந்யத் கிமபி தவ சேஷத்வ விபவாத்,
பஹிர்ப்பூதம் நாத! க்ஷணமபி ஸஹே யாது சததா
விநாசம் தத் ஸத்யம் மதுமதந! விஜ்ஞாபநமிதம்.

* * *–திருவாய்மொழியில் "ஏருளுமிறையோனும்" (4-8-) என்கிற திருவாய்மொழியில் "உடம்பினால் குறைவிலமே" "உயிரினால் குறைவிலமே" இத்யாதியாகப் பத்துப்பாசுரங்களாலே பரக்கப்பேசின அர்த்தத்தை இந்த ஒரு ச்லோகத்தில் அடக்கி அருளிச் செய்தாராயிற்று. ■

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

— இனி எம்பெருமானாருடைய ஸ்ரீ பாஷ்யத்திலிருந்து —

## ஸ்ரீ பாஷ்ய மங்களச்லோகத்தின் பொருள் விளக்கம்

அகிலபுவந ஜந்ம ஸ்தேம பங்காதிலீலே
விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே,
ச்ருதிசிரஸி விதீப்தே ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே
பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா.

இந்த ச்லோகத்திலே ச்ரிய:பதியான எம்பெருமான் பக்கலில் பக்திரூபாபந்நஜ்ஞாநத்தை ஸ்ரீயாலவந்தார் விரும்புவதாக மேலெழக் காணும் பொருள். இதிலுள்ள ஐந்து விசேஷணங்களாலும் நம்மாழ்வாருடைய பெருமைகளை விளக்கி, அவர் திறத்துப் பத்தியுண்டாம்படி ப்ரார்த்திப்பதாக உள்ளுறை பொருள். எம்பெருமான் ஸகல லோகங்களையும் படைத்தளித்துத் துடைப்பதை லீலையாகவுடையவன்; தன்னை வணங்கின வெவ்வேறு வகைப்பட்ட ப்ராணிஸமூஹங்களுக்கு முக்தியளிப்பதாகிற ரக்ஷணத்தைச் செய்வதையே விநோதமாகக் கொண்டவன்; *வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு* என்று பெரியாழ்வார் அருளிச் செய்தபடி வேதாந்தங்களில் மிக விளங்குபவன்; ஸ்வரூபத்தாலும் திருக்குணங்களாலும் மிகப் பெரியவன்; திருமகள் கொழுநன்; இத்தகைய பெருமை வாய்ந்த பரமபுருஷன் பக்கலில் மதிநலமுண்டாக வேணுமென்பது எம்பெருமான் பரமான பொருள். இத்தால் சாஸ்த்ரார்த்த ஸூசனமும் பண்ணினபடி.

## இனி நம்மாழ்வார் பரமான பொருள் கேளீர்:—

[அகிலபுவந ஜந்ம ஸ்தேம பங்காதிலீலே] இந்த விசேஷணம் ஆழ்வார்க்கு ஆகும்போது இரண்டுபடியாக யோஜநையாகும். அகிலபுவனங்களினுடைய ஜன்மஸ்தேமபங்கங்களுக்கு [ஆதி]காரணபூதனான எம்பெருமானோடே லீலாரஸம் அநுபவிப்பவர் ஆழ்வார். "அகிலபுவந ஜந்மஸ்தேம பங்காநாம் ய: ஆதி: (ஸர்வேச்வர:) தேந ஸஹ லீலா யஸ்ய தஸ்மிந்" என்று கொள்ளக் கடவது. திருவாய்மொழியில் (6-2) *என்னுடைய பந்துங்கழலும் தந்து போகுநம்பீ *விளையாடப்போதுமின் என்னப் போந்தோமை* என்றிவை முதலான பலபல பாசுரங்களிலே ஆழ்வார்க்கும் எம்பெருமானுக்கும் நிகழ்கின்ற லீலைகள் வாசாமகோசரம். இதுவொரு யோஜனை, மற்றொரு யோஜநையாவது, அகிலம்—புவந ஜந்மஸ்தேமபங்காதிலீல; யஸ்ய-என்று கொண்டு. எம்பெருமானையே எல்லாமாகவுடையவர் ஆழ்வார்; (அதாவது) *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம்பெருமான்* என்றிருந்தவர் நம்மாழ்வார் என்றதாகிறது. இப்படியிருந்தவர் ஆழ்வாரொருவரேயாதலால் இந்த யோஜநையும் மிகப்பொருந்தும். இதுவே முக்கியமான யோஜநை.

[விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷோ] விநத விவித பூத வ்ராதரக்ஷகத்வம் எம்பெருமானுக்குச் சொல்லப்பட்டாலும் *அநதிக்ரமணீயம்ஹி சரணக்ரஹணம்* என்கிற நியாயத்தாலும், மந்த்ரரத்நப்ரக்ரியையாலும் அந்த ரக்ஷண பாரத்தை எம்பெருமானுடைய திருவடிகளே வஹிக்கும். அந்தத் திருவடிகளுக்கு ஸ்ரீ சடகோபனென்றும் ஸ்ரீ சடாரியென்றும் நம்மாழ்வாருடைய திருநாமமேயாயிற்று. ஆகவே இந்த விசேஷணம் நம்மாழ்வாரிடத்திலே மிகவெளிதாக அந்வயிக்கக்குறையில்லை பாதுகாஸஹஸ்ரத்தில் ப்ரபாவபத்ததியில் (42) "ஜகதாம் அபிரக்ஷணே த்ரயாணாமதிகாரம் மணிபாதுகே! வஹந்த்யோ:" என்றச்லோகம் இங்குப் பொருத்தமாக அநுஸந்தேயம். இந்த விசேஷணத்தில் ஆழ்வார் விஷயமான யோஜனையில் விவரிக்க வேண்டிய விசேஷங்கள் பலவுண்டு; விஸ்தரபயத்தாலே விடுகின்றதத்தனை.

[ச்ருதி சிரஸி விதீப்தே] ச்ருதி சிரஸ்ஸாவது உபநிஷத்து; அதில் விசேஷண தீப்தர் ஆழ்வார். எங்ஙனேயென்னில்; *தத் விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸஸ் ஸமிந்ததே* இத்யாதிகளான உபநிஷத்வாக்யங்கள் ஆழ்வாரையன்றோ ஓதுகின்றன. விப்ராஸ: என்றது விப்ரா: என்றபடி. *ந சூத்ரா பகவத் பக்தா விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:* என்கிறபடியே விப்ரத்வ ஸித்திபெற்றவர் ஆழ்வார். (விபந்யவ:) *பண ஸ்துதௌ* என்கிற தாதுவிலிருந்து நிஷபந்நமான சொல்லாகையாலே விசேஷித்து ஸ்துதிகர்த்தாக்களென்றபடி. "தேவிற்சிறந்த திருமாற்குத்தக்க தெய்வக் கவிஞன், பாவிற்சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதனே" என்றபடி எம்பெருமானுக்குத்தகுந்த ஸ்தோதா ஆழ்வார். (ஜாக்ர்வாம்ஸ:)* கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலே* என்று சொல்லி இந்நிலத்திலே உறக்கமற்றிருப்பவர் ஆழ்வாரே. 'ஸமிந்ததே' என்றவிடத்து (ஸம்) என்கிற உபஸர்க்கத்தை நோக்கியே இங்கும் (விதீப்தே) என்று ஸோபஸர்க்கமாக வருளிச்செய்தது.

இதற்கு மற்றொரு யோஜனையுமுண்டு; ச்ருத்யாம் தீப்த:: ச்ருதிசிரஸி விதீப்த: என்கிறதாகக்கொள்க. ச்ருதியென்றது திருவாய்மொழி; அதில் தீப்தர் ஆழ்வார்; பதிகந்தோறும் நிகமனப்பாசுரத்திலே குருகூர்ச் சடகோபன்' என்று விளங்குபவரென்கை. இனி, ச்ருதி

சிரஸ்ஸாவது கண்ணிநுண் சிறுத்தாம்புதிவ்யப்ரபந்தம். அது திருவாய்மொழியின் முடிவிலே நியமேந அநுஸந்திக்கப்படுவதால் ச்ருதி சிரஸ்ஸாயிற்று. அதில் விசேஷேண ரீப்தர் ஆழ்வார்; அந்தப்ரபந்தம் முழுவதும் ஆழ்வார் விஷயமேயாதலால் அதில் விதீப்தரென்னக்குறையில்லையே.

[ப்ரஹ்மணி] "ஸர்வத்ர ப்ருஹத்த்வகுணயோகேந ஹி ப்ரஹ்ம சப்த:" என்ற ஸ்ரீ பாஷ்யத்தின்படி ப்ரஹ்மமென்றது மிகப்பெரிய வஸ்துவென்றபடி. ஆழ்வார் பெரிய திருவந்தாதியில் "புவியுமிரு விசும்பும் நின்னகத்த, நீ யென்செவியின் வழிபுகுந்து என்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன், நீ பெரியை யென்பதனை யாரறிவார்" என்கிற பாசுரத்தினால்—மிகப் பெரியவனை எம்பெருமானையும் தம்முள் ஒரு மூலையிலடக்கியிருக்கையாகிற பெருமை தமக்கேயுள்ளதென்று ஸோபபத்திகமாக நிரூபித்திருப்பதனால் ஆழ்வாரை ப்ரஹ்மமென்னத் தட்டில்லை. ஆழ்வார் தம்முடைய ப்ரஹ்மத்வத்தைத் தாமே உபபாதித்தருளியிருப்பது விசேஷம். அப்பாசுரத்தின்படி எம்பெருமான் ப்ரஹ்மமாகவும் ஆழ்வார் பரப்ரஹ்மமாகவும் தேறுதலால் இங்கு 'பரஸ்மிந் ப்ரஹ்மணி' என்றது ஆழ்வார்க்கு மிகவும் பொருந்தும்.

[ஸ்ரீநிவாஸே] *ஸது நாகவர: ஸ்ரீமாந்* *அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்* *லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:* இத்யாதிஸ்தலங்களில் பகவத் கைங்கர்யருசியும் பகவத் பக்தியுமே ஸ்ரீயாகச் சொல்லப்படுகையாலே அந்த ஸ்ரீயானது ஆழ்வார் பக்கலிலே குறையற்றதாகையாலே ஸ்ரீநிவாஸத்வம் ஆழ்வார்க்கும் அநபாயம். ஆக இப்படிப்பட்ட ஆழ்வாரிடத்திலே தமக்கு பக்தியை வேண்டினராயிற்று.

இந்த மங்கல ச்லோகத்தின் முதற் பாதம் * அகிலபுவநஜந்மஸ்தேம பங்காதிலீலே* என்பது. இதில் "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே" இத்யாத்யுபநிஷத்வாக்ய ஸித்தமாயும் ஜந்மாத்யதிகரணபாஷ்ய ப்ரபஞ்சிதமாயுமுள்ள ஜகஜ்ஜந்ம ஸ்திதிலயங்கள் அருளிச்செய்யப்பட்டன. ஸ்திதியாவது ரக்ஷணம்; இதுவும் முதல் பாதத்தில் சொல்லியாயிற்றென்பது ஸ்பஷ்டம். இப்படியிருக்க, *விநதவிவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே* என்று இரண்டாவது பாதம் எதற்கு? இதில் சொல்லப்படுகிற ரக்ஷணமும் முதல்பாதத்திலே சொல்லப்பட்டிருக்க, ச்லோக பூரணார்த்தமாகவா இந்தத் தனி விசேஷணம்? என்று கேள்வி எழுகின்றது.

இப்படிப்பட்ட ஸூக்திவிந்யாஸம் நம் பாஷ்யகாரரிடத்தில் தவிர இதரர்களிடத்தில் காணக்கிடைக்காது. ஸ்வாமி ஆழ்வாரருளிச் செயலை அடியொற்றியே இந்த விசேஷணமிட்டருளினர். எங்ஙனே யென்னில்: ஆழ்வார் திருவாய்மொழியில் (1-3-2). *எளிவருமியல் வினன்* என்கிற பாட்டில் "ஒளி வருமுழுநலம் முதலில கேடில" என்று அபரிமிதகல்யாணகுண முடைமையைச்சொல்லி, உடனே "வீடாந் தெளிதரு நிலைமையது ஒழிவிலன்" என்கிறார். மோக்ஷமாகிற தெளிந்த நிலத்தைத் தருவதான அந்த ஸ்வபாவத்தை அதாவது மோக்ஷப்ரதத்வத்தை எப்போது முடையவன் என்பது இதன் பொருள். இங்கே நம் ஆசார்யர்கள், *ஒளிவருமுழுநலம்* என்றதிலேயே மோக்ஷ ப்ரதத்வமாகிற இந்த குணமும் அடங்காதோ? என்று கேட்டுக் கொண்டு 'மோக்ஷப்ரதத்வம் தனியே சொல்லவேண்டுவதொரு குணமாகையாலே சொல்லுகிறார்" என்றருளிச்செய்கிறார்கள். [இங்கு முக்கியமாகக் குறிக்கொள்க.] இப்படி மோக்ஷப்ரதத்வத்தைத் தனிப்பட அருளிச் செய்தவர் நம்மாழ்வாரேயாவர். இங்கே யருளிச் செய்வது தவிரவும் இரண்டாம்பத்தில் *அணைவதரவணைமேல்* என்கிற திருவாய் மொழியாலும் மோக்ஷப்ரதத்வத்தை விசேஷேண அருளிச்செய்கிறார். தேசிகனும் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியிலும் ஸாரத்திலும் அந்தத் திருவாய்மொழிக்கு மோக்ஷப்ரதத்வமே அநுபாவ்யகுணமென்று அறுதியிடுகிறார். ஆக இங்ஙனே மோக்ஷப்ரதத்வத்தை ஆழ்வார் தனிப்பட அருளிச் செய்திருப்பது கொண்டே ஸ்வாமி ராமாநுஜரும் *விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே* என்பதனால் இதைத் தனிப்பட அருளிச்செய்தார்.

இதற்குமேல் மூன்றாவது பாதத்தில் 'ஸ்ரீநிவாஸே' என்றருளிச் செய்ததிலும் விசேஷித்து அவதானம் செல்லவேண்டும். *அகில புவநேத்யாதியான இந்த ச்லோகத்தில் பாஷ்யத்திற்கு மூலமான சாரீரகமீமாம்ஸையின் சாஸ்த்ரார்த்த ஸங்க்ரஹம் செய்யப்படுகிற தென்பது முக்கியமான விஷயம். இந்த சாரீரக மீமாம்ஸையில் ஒரு ஸூத்திரத்திலும் லக்ஷ்மீ ஸம்பந்தம் ப்ரஸ்தாவிக்கப்படவுமில்லை; அப்படியிருக்க ஸ்வாமி எதுகொண்டு 'ஸ்ரீநிவாஸே' என்றருளிச்செய்தா ரென்று விமர்சிக்கவேணும். ஆழ்வார்கள் கோஷ்டியில் *திருவில்லாத் தேவரைத் தேறேல்மின் தேவு* [ஸ்ரீஸம்பந்தமில்லாத தெய்வத்தைத் தெய்வமாக நினைக்கவேண்டா] என்கிற உத்கோஷமிருப்பதனாலே அதை யாதரித்தே ஸ்வாமி இங்கு 'ஸ்ரீநிவாஸே' என்றருளிச்செய்தது.

இதற்குமேல் நாலாவதுபாதத்தில் "பக்திரூபா சேமுஷீ பவது" என்றதும் அவதேயம். 'மம பக்திர் பவது மம பக்திரஸ்து' என்றருளிச் செய்தால் போதுமே; 'பக்திரூபா சேமுஷீ பவது' என்றது ஏன் ? என்று ஆராயவேணும். திருவாய்மொழி முதற்பாசுரத்தில் "மதிநலமருளினன்" என்று ஆழ்வார் பாசுரமுள்ளது. மதியாவது ஞானம்; நலமாவது பக்தி. ஞானமும் பக்தியுமாகிற இரண்டையும் தந்தான் என்று சிலர் நிர்வஹித்தார்கள். நலமான மதியைத் தந்தானென்று கொண்டு, முளைக்கும் போதே வயிரம் பற்றி முளைக்கும் பதார்த்தம்போலே பக்திரூபாபந்நமான ஞானத்தைத் தந்தானென்பதே முக்கியமான நிர்வாஹமாகக் காட்டப்படுகிறது. எம்பெருமானார் இவ்விதமான அர்த்தத்தைத் திருவுள்ளம்பற்றியே "பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா" என்றருளிச் செய்தாரென்பதே இங்கு தலையான விஷயம். "புத்திர்மநீஷா திஷணா தீ: ப்ரஜ்ஞா சேமுஷீ மதி:" என்பது அமரகோசம். மதியும் சேமுஷியும் பர்யாயமே. பக்தியும் நலமும் பர்யாயமே. ஆழ்வார்க்கு மதிநலமருளினது போல அடியேனுக்கும் மதிநலமருள வேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று.

சாரீரகமீமாம்ஸையின் முதல் ஸூத்ரம் *அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா* என்பது. இதில் ப்ரஹ்ம சப்தத்திற்கு சங்கராசாரியர் பாஷ்யம் "ப்ரஹ்ம ச வக்ஷ்யமாண லக்ஷணம் ஜந்மாத்யஸ்ய யத இதி" என்றிவ்வளவே யுள்ளது. ஸ்வாமியின் பாஷ்யஸூக்தியோவென்னில் "ப்ரஹ்ம சப்தேந ஸ்வபாவதோ நிரஸ்த நிகிலதோஷ: அநவதிகாதிசய அஸங்க்யேய கல்யாண குணகண: புருஷோத்தம: அபிதீயதே" என்று உள்ளது. ஆழ்வார் திருவாய்மொழி தொடங்கும் போதே உயர்வறவுயர் நலமுடையவன் என்றருளிச்செய்த சந்தையையே ஸ்வாமி நேராக மொழிபெயர்த்திருக்கிறார் உயர்வற— அநவதிகாதிசய, உயர்— அஸங்க்யேய, நலமுடையவன் — கல்யாணகுணகண:, யவனவன்—புருஷோத்தம:. ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் முழுவதும் பகவத் குணமயமேயாதலால் அந்த அம்ருத ஸாகரத்திலே யூறின ஸ்ரீராமாநுஜர் அதற்குத் தகுந்தபடியே அருளிச் செய்கிறார். தமிழில், மால் என்றும் நெடுமால் என்றுமுள்ள சொற்களுக்குண்டான அர்த்தங்களையே ப்ரஹ்ம சப்தார்த்தமாக ஸ்வாமி உபபாதிக்கும் பரிசு அத்யாச்சர்யம். ... *

அந்தஸ் தத்தர்மோபதேசாத் 1-1-21

இங்கு *பேதவ்யபதேசாச்சாந்ய:* என்கிற மேல் ஸூத்திரத்திலிருந்து அந்ய: என்கிற பதம் வருவித்துக் கொள்ளப்படுகிறது. அந்த:- ஆதித்ய மண்டலத்தினுள்ளே உறையும் புருஷன். அந்ய:-ஜீவனைக் காட்டிலும் வேறுபட்ட பரமபுருஷன்; தத்தர்மோபதேசாத்-அந்த பரம புருஷனுக்கே அஸாதாரணமாகவுரிய தர்மங்களை இங்கு ஓதியிருப்பதனாலே—என்று ஸூத்ரத்திற்குப் பொருள்.

இவ்விடத்து ஸ்ரீபாஷ்யத்தில் உபயவேதாந்த ரஸிகர்களுக்கு ஒரு சிறந்த விஷயம் நினைவூட்ட வேண்டியதுண்டு; ஸ்வாமி யெம்பெருமானார் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்யும்போது ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளை இடைவீடின்றித் திருவுள்ளத்தில் சிந்தனை செய்து கொண்டேயிருந்தவரென்று முன்னோர்கள் மொழிந்திருப்பதுண்டே. அது உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த அறிவுபெற்ற மஹான்களுக்கே அறியவெளிது. இதற்குச் சான்றாக எடுத்துக்காட்டக்கூடிய விடங்கள் பலவுண்டு. ப்ரக்ருதம் இந்த ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் உள்ளதான அரிய பெரிய விஷயமொன்று இங்கு நிரூபிக்கப்படுகிறது. இவ்விடத்தில் பரமபுருஷனுக்கு சரீர ஸம்பந்தம் கிடையாதென்று பூர்வபக்ஷவாதத்தில் ப்ரஸக்தமானதை ஸ்வாமி கண்டிக்குமிடத்து ஸ்ரீ ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களில் சரீர பரிக்ரஹம் பகவான் செய்தருளுகிறபடியை நிரூபித்துவருகையில் *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்* என்கிற கீதா ஸூக்தியை யெடுத்துக்காட்டி, *ஸாது பரித்ராணமேவ உத்தேச்யம்; ஆநுஷங்கிகஸ்து துஷ்க்ருதாம் விநாச:; ஸங்கல்பமாத்ரேணாபி ததுபபத்தே.* என்றுள்ளது ஸ்ரீபாஷ்ய ஸூக்தி. எம்பெருமான் அவதாரம் செய்தருள்வது ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதற்காகவும் துஷ்டர்களைத் தொலைப்பதற்காகவுமானாலும் ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதொன்றே உத்தேச்யம்; துஷ்டர்களைத் தொலைப்பதென்பது ஸங்கல்ப மாத்திரத்தினாலும் ஆகக்கூடியதாதலால் அது ஆநுஷங்கிகமேயொழிய ப்ரதானமன்று—என்பது மேலெடுத்துக் காட்டிய ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியின் கருத்து. "துஷ்டர்கள் தொலையக் கடவர்கள்" என்று ஸங்கல்பிப்பதுபோல "ஸாதுக்கள் ஸம்ரக்ஷணம் பெறக்கடவர்கள்" என்று ஸங்கல்பிக்க முடியுமன்றோ. ஏன் முடியாது?

அப்படியிருக்க, துஷ்டசிக்ஷணமே ஸங்கல்ப ஸாத்யமென்றும் ஸாது ஸம்ரக்ஷணம் ஸங்கல்ப ஸாத்யமன்று என்றும் ஸ்ரீ பாஷ்யகாரர் எது கொண்டு ஸாதிக்கிறரென்று ஆராயுமளவில், நம்மாழ்வாருடைய ஸுஸ்பஷ்டமான ஸ்ரீ ஸூக்தியைக்கொண்டே ஸாதிக்கிறரென்று நன்கு விளங்குகிறது. அதை விவரிப்போம்.

திருவாய்மொழியில் (3—1—9) *மழுங்காத வைந்நுதிய சக்கர நல்வலத்தையாய், தொழுங்காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில் தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே* என்கிற பாசுரம் பரம போக்யமானது. எம்பெருமான் ஸ்ரீ கஜேந்திராழ்வானுடைய கூக்குரலைக் கேட்டு அரைகுலையத் தலைகுலைய மடுவின் கரையிலே ஓடிவந்து விழுந்தானென்கிற இதிஹாஸம் ப்ரஸித்தமானது. எதற்காக ஓடி வரவேண்டும்? * கருடனிடம் பொருதுவரவல்ல திருவாழியாழ்வானைத் திருநாட்டிலிருந்தே ஏவினால் அவன் ஒரு நொடியில் யானையின் இடரைத் தீர்த்துவரமாட்டானோ? அவனுக்குத்தான் ச்ரமம் கொடுக்க வேண்டுமோ? ஸகல ஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் கருவியாயுள்ள ஸங்கல்பத்தினால் யானையிடரை அவலீலையாகத் தீர்த்திருக்கலாமே. இவ்விரண்டுபடியுமின்றிக்கே அறப்பதறியோடிவந்தது எதற்காக? என்று நம்மாழ்வார் கேள்வி கேட்டுக்கொண்டு ஸமாதானத்தையும் தாமேயருளிச்செய்துள்ளார். *தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே* என்கிற இரண்டாமடிதான் ஸமாதானம். கஜேந்திராழ்வான் தன்னெதிரே வந்து நின்ற பகவானை நோக்கி, "நாஹம் கனேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ" என்றான். [என்றேனுமொரு நாள் அழிந்தேபோகக்கூடியதான இவ்வுடலுக்காக நான் கரையவில்லை; எம்பெருமானே! உன்னை ஸேவித்து உன் பொற்றாமரையடிகளில் இத்தாமரை மலர்களைப் பணிமாறுவதற்காகவே கரைந்தேன் என்றான்.] இப்படிப்பட்ட ஆவல்கொண்ட பக்தசிகாமணிகளின் ஆசையை ஸங்கல்பத்தினால் தலைக்கட்டினால் அவனுக்கு அவத்யமாமென்பதையும் அப்பாசுரத்தின் பின்னடிகளில் ஆழ்வார் தாமே விவரித்துக் கூறியுள்ளார். நேரில் அவதரித்துத் திருமேனியைக் காட்டியே அன்பர்களைக் காக்க வேண்டும் — என்று ஆழ்வாரருளிச்செய்த அர்த்தத்தையே இங்கு ஸ்வாமி உயிராகக்கொண்டு பணித்தாராயிற்று. .... ....

# திருவாய்மொழியே வடிவெடுத்த ப்ரஹ்மஸூத்ரபாஷ்ய மொன்று.

*சாரீரகமீமாம்ஸா — த்விதீயாத்யாய — த்விதீய பாதத்தில்* ஸர்வதாநுபபத்தி யதிகரணத்தில் ஸர்வசூந்யவாதிகளான பௌத்த ஏகதேசிகளின் பக்ஷம் நிரஸிக்கப்படுகிறது. பரப்ரஹ்மமே ஜகத்காரண மென்று நன்கு நிலைநாட்டத்தோன்றிய இந்த அத்யாயத்தில் ஸர்வ சூந்யத்வவாதத்தை நிரஸிக்க என்ன ப்ரஸக்தியென்று சிலர் நினைக்கக் கூடும். ஜகத்காரண வஸ்து ப்ரதாநமா? பரமாணுவா? பரப்ரஹ்மமா? என்கிற விசாரம் எப்போது பொருந்துமென்னில்; உண்மையில் ஜகதுத்பத்தி யென்பதொன்று நிரூபிக்க முடியுமானால் அப்போது பொருந்தும். அடியோடு இல்லாதவொரு பிள்ளைக்கு மாதாபிதாக்களைப் பற்றி விசாரம் செய்வதுண்டோ? ஜகதுத்பத்தியே நிரூபிக்கமுடியாததா யிருக்க, எது ஜகத் காரணம் என்கிற சர்ச்சை ஏதுக்கு? உத்பத்தி யானது பாவத்திலிருந்து அங்கீகரிக்கப்படுகிறதா? அபாவத்திலிருந்து அங்கீகரிக்கப்படுகிறதாவென்று கேட்கிறோம். பாவத்திலிருந்து என்பது சேராது; மண்பிண்டத்திலிருந்து பானை முதலியன உண்டா கின்றனவென்றால் மண்பிண்டத்தை உபமர்த்தித்துக் கொண்டுதானே யுண்டாகின்றன. எந்த காரியப்பொருளும் காரணப்பொருளை உபமர்த்தி யாமல் உண்டாவதில்லை யென்பதைக் காணா நின்றோம். காரணாகாரத் தின் விநாசந்தானே உபமர்த்தமாவது; அதுதான் அபாவமே. ஆக பாவத்தில் நின்றும் உத்பத்தியில்லை யென்று தேறிற்று. அபாவத்தில் நின்றுங்கூட உத்பத்தியில்லையென்பது அநாயாஸமாகத் தெரியவரும். அபாவத்திலிருந்து பாவோத்பத்தி ஸம்பவிக்கமாட்டாதன்றோ. ஆக உத்பத்தியே நிரூபிக்க முடியாதிருப்பதால் உத்பத்திக்குப் பிற்பட்டன வான விகாரங்கள் எதுவுமே கிடையாவென்பது ஸித்தம். லோகவ்ய வஹாரமெல்லாம் ப்ரமமூலகமே. [இது ஸர்வசூந்யவாதிகளின் வாத ப்ரக்ரியை.]

இப்படி சூந்யமே தான் தத்துவம் என்பவர்கள் இங்கு நிரஸிக்கப்படுகிறார்கள். [ஸர்வதாநுபபத்தேச்ச] என்பது ஸூத்ரம். ப்ரமேயங்களோ ப்ரமாணங்களோ எதுவும் உண்டாகிலுமாம் இல்லை யாகிலுமாம்; பூர்வபக்ஷிக்கு அபிமதமான சூந்யத்வம் ஒரு விதத்திலும் தேறாதாகையாலே மாத்யமிகதர்சநம் அஸமஞ்ஜஸ மென்றபடி. 'ஸர்வம் சூந்யம்' என்று சொல்லுபவர்கள் தங்களுக்கு அபிமதமான இவ்வர்த் தத்தை ஸாதித்துத் தரும்படியான ப்ரமாணமொன்று உண்டென்று

இசையும் பக்ஷத்தில் ப்ரமாண ஸத்பாவத்தை யிசைந்தபோதே ஸர்வ சூந்யவாதம் தொலைந்தது. ப்ரமாணமில்லை யென்னும் பக்ஷத்தில்; ப்ரமாணமில்லாமையினாலேயே தங்களுக்கு அபிமதமான அர்த்தம் அஸித்தமென்று முடிந்தது. மேலும் 'ஸர்வம் சூந்யம்' என்கிற விந்த வார்த்தையினால் நாஸ்தித்வந்தானே விவக்ஷிதமாகவேணும். ஒரு ரூபத்தை விட்டு மற்றொரு ரூபத்தையடைவதே நாஸ்தி பதார்த்த மாகையாலே ரூபாந்தரந்தாலே அஸ்தித்வமே சொல்லப்பட்டதாக முடிகிறது. மண்ணுண்டையொன்று இருந்தது. பானை தோன்றும் போது அந்த ம்ருத்பிண்டம் நசிக்கிறது. அது நசித்தவளவிலே 'ம்ருத் பிண்டோ நாஸ்தி' என்று சொல்லுகிறான். இந்த வ்யவஹாரத்தில் பானை யென்கிற அவஸ்தைதானே விஷயமாகிறது.



உலகில் அஸ்தி நாஸ்தித்வங்களை வழங்குகிறவர்கள் 'இப்போது மண்ணுண்டையிருக்கிறது, இப்போது மண்ணுண்டை யில்லை; இங்கு மண்ணுண்டையிருக்கிறது இங்கு மண்ணுண்டை யில்லை; என்றிப்படி இடத்தையும் காலத்தையும் உட்படுத்தியே வ்யவஹரிக்கிறார்கள்: தேச காலங்களைச் சேர்க்காமல் வெறுமனே 'மண்ணுண்டையில்லை' என்கிற ப்ரதீதியோ வ்யவஹாரமோ எங்கும் காண்பதில்லை. 'இப்போது ம்ருத்பிண்டமிருக்கிறது' என்றோ 'இங்கு ம்ருத்பிண்டமிருக்கிறது' என்றோ ஒருவன் வ்யவஹரித்தால் மண் என்னும் த்ரவ்யத்திற்கு பிண்டத்வாவஸ்தை விஷயம். இப்போது ம்ருத்பிண்டமில்லை' என்றோ 'இங்கு ம்ருத்பிண்டமில்லை' என்றோ வ்யவஹரித்தால் பிண்டத்வாவஸ்தையின் நாசமாகிய கடத்வாவஸ்தை விஷயம். ஆக நாஸ்தித்வவ்யவஹாரம் பண்ணினாலுங்கூட வேறொரு ஆகாரத்தாலே அஸ்தித்வமே தேறிநிற்கிறதென்பதை ஸர்வாநுபவ ஸாக்ஷிகமாகக் காணலாம். இன்ன வஸ்து இங்கில்லை என்றால் மற்றோ ரிடத்திலுள்ளதாகத் தேறியே தீரும். இப்போதில்லை யென்றாலும் மற்றொருபோதில் உண்டென்றதாகத் தேறியேவிடும். ஆகவே ஒருபடி யாலும் ஸர்வசூந்யவாதம் ஸித்தியாது என்றதாயிற்று. ஸூத்ரத்தின் மேலே பொருள் காண்பது எங்ஙனே யென்னில்; ஸர்வதா — ஸர்வ ப்ரகாரத்தாலும், அநுபபத்தே: — ஸ்வாபிமதமான ஸர்வசூந்யவாதம் உபபந்நமாகாமையினாலே என்றபடி. 'ஸர்வப்ரகாரத்தாலும்' என்றதை ஸ்ரீ பாஷ்யத்தில் ஸ்வாமி விவரித்தருளும்போது "ஸதிதி ப்ரதிஜ்ஞாயாம் அஸதிதி ப்ரதிஜ்ஞாயாஞ் ச" என்றருளிச் செய்கிறார். ஸ்வாமிக்கு

இப்பொருள் தோன்றினது எதனாலென்னில்; திருவாய்மொழியில் (1-1-9)*உளனெனிலுளன் அவனுருவ மிவ்வுருவுகள், உளனலனெனில் அவனருவ மிவ்வருவுகள், உளனென விலனெனவிவைகுண முடைமை யின், உளனிருதகைமையோடொழிவிலன் பரந்தே* என்ற பாசுரங் கொண்டே இந்த ஸூத்ரத்தின் பொருளை ஸ்வாமி அறுதியிட்டருளினா ரென்பது நிஸ்ஸந்தேஹம். அப்பாசுரத்தின் ஆறுயிரப்படியை ஸேவித் தால் இஃது எளிதிற் புலனாகும். அப்பாட்டிற்குத் தமிழ் மொழியா லெழுதப்பட்டுள்ள பொருள்தான் ஸ்ரீபாஷ்யத்தில் வடமொழியா லெழுதப்பட்டுள்ளதென்பதை விசதமாக நிரூபித்துக்காட்டுகிறேன் காண்மின்;

| திருவாய்மொழி ஸூக்தி | ஸ்ரீபாஷ்ய ஸூக்தி |
|---|---|
| (1) உளனெனில் உளன் ; அவனுருவம் இவ்வுருவுகள் ; | (1) கிம் பவாந் ஸர்வம் ஸதிதி ப்ரதி ஜாநீதே? (ததாஸதி) தவாபிப்ரே தம் துச்சத்வம் ந ஸம்பவதி ; |
| (2) உளனலனெனில் உளன் ; அவனருவ மிவ்வருவுகள் ; இருதகைமையோடு உளன். | (2) கிம்பவாந்அஸதிதிப்ரதிஜாநீதே? (ததாபி) துச்சத்வம் ந ஸம்பவதி; சூந்யமிதி ப்ரதிஜாநதா ஸதிதி ப்ரதிஜாநதேவ ஸர்வஸ்ய வித்ய மாநஸ்ய அவஸ்த்தாவிசேஷ யோகிதைவப்ரதிஜ்ஞாதாபவதீதி துச்சதா ந குதச்சிதபி ஸித்யதி !! |

## ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்தி வைலக்ஷண்யம்

கீதாபாஷ்யத்திலோ ஸ்ரீ பாஷ்யத்திலோ ஸ்வாமியருளிச் செய்யும் ஸ்ரீஸூக்திகளில் நெஞ்சையுருக்கும்படியான ஒரு அதிசயம் அடியேனுடைய அநுபவத்தில் காண்கிறது. இவ்வதிசயம் வேறு எந்த பாஷ்யத்திலும் காணமுடியாது. அஃது என்னென்னில், மூலத்தில் பரம புருஷனுடைய ப்ரஸ்தாவம் வருமிடங்களில் ஆழ்வார்களுடைய திவ்யஸூக்திச் சாயையிலே அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிப் பெருமைகளை விளக்கிப் பல விசேஷணங்களை அருளிச்செய்தாலொழிய ஸ்வாமிக்குத் தரிப்பு உண்டாவதில்லை. ஸ்ரீபாஷ்யத்திலும் ஓரிடம் காட்டுகிறேன். அதில் கடைசியான ஸூத்திரம் [அநாவ்ருத்திச் சப்தாத் அநாவ்ருத்திச் சப்தாத்] என்பது. இங்கு மூலத்தில் பரமபுருஷனுடைய ப்ரஸ்தாவமேயில்லை. பரமபதத்தைச் சென்றடைந்த முக்தர்கள் மீண்டும் இந்நிலத்தில் திரும்பி வருவது உண்டா. இல்லையா? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இந்த ஸூத்ரம் அவதரித்துள்ளது. 'புநரா

வ்ருத்தி கிடையாதென்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே அது இல்லை' என்றிவ்வளவே ஸூத்ரம் சொல்லி நின்றது. இதை விவரிக்குமிடத்து ஸ்வாமி யெம்பெருமானார், 'பகவானொருவனுளனென்று எந்த சாஸ்த்ரம் அறிவிக்கின்றதோ அந்த சாஸ்த்ரமே பகவானை அடைந்தவர்கட்குப் புநராவ்ருத்தியில்லை என்றும் தெரிவிக்கின்றது'' என்றருளிச் செய்கிறார். இங்கு 'யதா பரமபுருஷ: அஸ்தீதிசப்தாத் அவகம்யதே .... .... ....'' என்றிவ்வளவே அருளிச்செய்தால் போதுமானது; ஆயினும் ஸ்வாமி இங்கே அருளிச்செய்வது பாரீர் :—

''யதா நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந: ஜகஜ்ஜந்மாதி காரணம் ஸமஸ்தவஸ்துவிலக்ஷண: ஸர்வஜ்ஞ: ஸத்யஸங்கல்ப: ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதி: நிரஸ்த ஸமாப்யதிக ஸம்பாவந: பரம காருணிக: பரப்ரஹ்மாபிதாந: பரமபுருஷ: .... .... ....'' என்று இவ்வளவு விசேஷணங்களை யருளிச்செய்கிறார். கீதையில் ஒன்பதாமத்யாயத்தில் முடிவு ச்லோகம் 'மந்மநா பவ மத்பக்த:' என்பது; இதில் மந்மநா பவ என்பதற்கு என்னிடத்தில் மனத்தை வைத்திடு என்று பொருள். இப்பொருள் யாவர்க்கும் தெரிந்ததே, எளிதில் தெரியக்கூடியதே என்கிற கருத்தினால் மத்வபாஷ்யகாரர் அடியோடு அர்த்தம் செய்யவே யில்லை. சங்கராசாரியர் ''மயி வாஸுதேவே மந: யஸ்ய ஸ: த்வம் மந்மநாபவ'' என்று உரைத்தார். என்னிடத்தில் என்பதற்கு வாஸுதேவனாகிய என்னிடத்தில் என்று அர்த்தம் என்பதாக விவரித்தாராயிற்று. இனி ஸ்வாமியின் பாஷ்யத்தையெடுத்துக் கொள்வோம். அவ்விடத்து பங்க்திகளை ஸேவித்தால் கல்நெஞ்சினனுக்கும் கண்ணீர் பெருகும்.

''மந்மநா பவ-ஸர்வேச்வரே நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநே ஸர்வஜ்ஞே ஸத்யஸங்கல்பே நிகில ஜகதேககாரணே பரஸ்மிந் ப்ரஹ்மணி புருஷோத்தமே புண்டரீக தலாமலாயதேக்ஷணே ஸ்வச்ச நீலஜீமூத ஸங்காசே யுகபதுதித திநகரஸஹஸ்ர ஸத்ருசதேஜஸி லாவண்யாம்ருதமஹோததௌ உதாரபீவரசதுர்பாஹௌ அத்யுஜ்ஜ்வல பீதாம்பரே அமலகிரீட மகர குண்டலஹாரகேயூரகடகபூஷிதே அபார காருண்ய ஸௌசீல்ய ஸௌந்தர்ய மாதுர்ய காம்பீர்யௌதார்ய வாத்ஸல்ய ஜலதௌ அநாலோசித விசேஷாசேஷலோகசரண்யே ஸர்வஸ்வாமிநி தைலதாராவத் அவிச்சேதேந நிவிஷ்டமநா பவ'' என்கிற இவ்வளவும் அதிகம்பீரமான ஸ்வாமி ஸ்ரீஸூக்தியாகும்.

இந்த மஹாவாக்யத்தில் எம்பெருமானைப் பற்றின விசேஷணங்கள் பதினெட்டு உள்ளன. இத்தனை விசேஷணங்கள் இங்கு அவசியமோவென்று சிலர் நினைக்கக்கூடும். உண்மையில் அவச்யமன்றென்றும் சொல்லலாம். விஸ்தரத்தில் ருசியில்லாதவரான ஸ்வாமி இவ்வளவு ஏன் அருளிச் செய்தாரென்று ஆலோசிக்க வேண்டும். ஸ்வாமி யெம்பெருமானார் 'பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்களிராமானுசமுனி வேழம்' என்றும் 'கலிமிக்க செந்நெற்கழனிக்குறையல் கலைப்பெருமானொலி மிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்க சீயமிராமானுசன்' என்றும் நூற்றந்தாதியில் அமுதனார் அருளிச்செய்தபடியே ஆழ்வாரருளிச் செயற்கடலில் அநவரதம் அவகாஹித்தவராதலால் அதன் பலனாகவே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளை (ஸ்வாமி) பலகாலும் அருளிச்செய்ய ப்ராப்தமாகிறது. கண்ணபிரான் தன்னிடத்தில் பக்தி பண்ணும்படி விதிக்கிற இவ்விடத்தில் எம்பெருமான் தன்னுடைய இத்தனை விசேஷங்களை யெடுத்துக் காட்டாவிடில் எங்ஙனே பக்தி யுண்டாகும்? அவனுடைய ஸ்வரூப வைலக்ஷண்யத்தையும் திவ்யமங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்தையும் திவ்ய பூஷணாதி வைசிஷ்ட்யத்தையும் திருக்கல்யாண குண பௌஷ்கல்யத்தையும் எடுத்துக் காட்டுவதானது கண்ணபிரான் தானே இவற்றையெடுத்துரைத்து இவற்றிலேயீடுபடும்படி சொல்லுவதாக'பன்றேவுள்ளது. இதர பாஷ்யகாரர்களுக்கு திவ்ய ப்ரபந்தஜ்ஞான ஸம்பத்து சிறிதுமில்லாமையினாலே அவர்கள் இப்படிப்பட்ட விசேஷணங்களை ஓரிடத்தில் கூட எழுதிவைக்க ப்ரஸக்தியில்லையாயிற்று.

இங்ஙனே ஓரிடமன்று இரண்டிடமன்று; பலபலவிடங்கள் காணலாம். மற்ற பாஷ்யகாரர்களுக்கு இப்படிப்பட்ட வாக்விந்யாஸம் பண்ணத் தெரியாமலில்லை. பகவானிடத்தில் பக்தியில்லாமையுமில்லை. ஆயினும் அவர்களுடைய கையிலிருந்து இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளில் ஏகதேசமும் அவதரிக்கக் காண்கிறிலோம். *செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரையடிக்கள் செம்பொன் திருவுடம்பே' என்றும் 'கைவண்ணம் தாமரைவாய் கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே' என்றும் 'செக்க மலத்தலர்போலும் கண்கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலை போலுந் திருமேனி யடிகளுக்கே' என்றும் வாய்வெருவுகின்ற ஆழ்வார்களின் ஈரச்சொற்களிலே ஆழங்காற்பட்டிருக்கு மாசிரியர்களுக்கே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்தி விந்யாஸவைபவம் வாய்க்கின்றது.

# கிரீடமகுட சூடாவதம்ஸ விசேஷம்

ஸ்வாமி யருளிச் செய்த சரணாகதி கத்யத்தில் *அகிலஹேய ப்ரத்யநீக இத்யாதியான பெரிய சூர்ணையில், திவ்யாயுத வர்ணனம், திவ்ய மஹிஷீ வர்ணனம் முதலான பல வர்ணனங்கள் ஆச்சர்யமாகச் செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் திவ்யபூஷண வர்ணன பரமான *ஸ்வோசித விவித விசித்ராநந்தேத்யாதி' வாக்யத்தில் "கிரீடமகுட சூடாவதம்ஸ" என்றுள்ள ஸ்ரீஸூக்தியின் ஆழ்பொருளைப் பற்றிச் சிறிது விமர்சிப்போமிங்கு. கிரீடமென்றும் மகுடமென்றும் சூடாவ தம்ஸமென்றும் தனித்தனியாக மூன்று சொற்கள் இருந்தாலும் இவை மூன்றும் திருமுடியிலணியும் ஆபரணத்தையே சொல்லும். அந்த ஆபரணம் ஒரே [விதமாக இருப்பதில்லை; திருவபிஷேக மென்றும், கொண்டை யென்றும், தொப்பார மென்றும் மூன்று விதமாக வழங்கி வருவதுண்டாதலால் அம்மூவகைத் திருவாபரணங்களுக்கும் வாசக மாகக் கிரீடமென்றும் மகுடமென்றும் சூடாவதம்ஸ மென்றும் மூன்று பதங்கள் இங்கு ப்ரயோகிக்கப்பட்டனவென்னலாம். முக்கியமாயும் உபதேச பரம்பராப்ராப்தமாயுமுள்ள ரஸ்யரஹஸ்யார்த்த மொன்று இங்கு அறியவேண்டியதுண்டு. நம்மாழ்வாருடைய திவ்ய ஸூக்தி யொன்றைத் திருவுள்ளம்பற்றியே "கிரீட மகுடசூடாவதம்ஸ" என்று மூன்று சிரோபூஷணங்களைப் பேசியுள்ளார் எம்பெருமானார்.

அந்த திவ்ய ஸூக்தி யெதுவென்னில், திருவிருத்தத்தில் *பாரளந்த பேரரசே! எம்விசும்பரசே! எம்மை நீத்து வஞ்சித்தோ ரரசே!* என்றுள்ள பாசுரமாம். இதில், அரசே! அரசே! அரசே! என்று மூன்று விசை விளித்தருளுகிறார். பாரளந்த பேரரசே! என்ப தனால், உலகளக்கிற வியாஜத்தினால் எல்லார் தலையிலும் திருவடியை வைக்கையாகிற ஸௌலப்யகுணம் அநுபவிக்கப்பட்டது. விசும்பரசே! என்பதனால் நித்ய ஸூரிநாதத்வமாகிற பரத்வம் அநுபவிக்கப்பட்டது. எம்மை நீத்து வஞ்சித்தோரரசே! என்பதனால் தம்மோடு ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் பண்ணிப் போருகையாகிற ப்ரணயித்வகுணம் அநுபவிக்கப்பட்டது. ஆக ஸௌலப்யத்துக்காகக் கவித்த முடியும், பரத்வத்துக்காகக் கவித்த முடியும், ப்ரணயித்வத்துக்காகக் கவித்த முடியுமாக மூன்று முடிகள் நம்மாழ்வாரால் எம்பெருமானுக்குச் சூட்டப் பட்டனவாயின. இதை அடியொற்றியதே எம்பெருமானாருடைய ஸ்ரீஸூக்தி.

## முக்யமான அறிவிப்பு

"அருளிச் செயல் உடசொல் விளக்கு" என்கிற கட்டுரை ஸசேஷமாக நிற்கிறது, அச்சுக்கூடத்தில் மானஸ்க்ரிப்டு கைசோர விடப்பட்டதனால் மறுபடியும் எழுதிக்கொடுக்க வேண்டியதாயிற்று. அது அடுத்த இதழில் முடிவுபெறும். அதை எதிர்பார்ப்பவர்கள் ஏமாற்றமடையார்கள். சிறிது தாமதம் பொறுக்க. ... .... *

---

## பெரியாரின் பரமபத ப்ராப்தி

திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்த பிரபல அட்வகேட் ஸ்ரீ. உ. வே. K. E. ராஜகோபாலாசார்யஸ்வாமி சில மாதங்கள் திருமேனி பாங்கில்லாமலெழுந்தருளி யிருந்து 18-1-81ல் தமது திருமாளிகையில் திருநாட்டுக்கெழுந்தருளினது மிக வருந்தத்தக்கது. இவர், பெருமாள் கோயில் ஸ்ரீதேவராஜஸ்வாமி தேவஸ்தானத்தில் வியவஹாரங்களில் நெடுநாள் பரிச்ரமப்பட்டு வெற்றி பெறுவித்தவர். இவருடைய குடும்பத்திற்கு எமது அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம். *

---

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

## ஸுசிரஸ்மரணீய மஹநீயஸ்மரணம்

"பரிவர்த்திநி ஸம்ஸாரே ம்ருத: கோ வா ந ஜாயதே?

ஸ ஜாதோ யஸ்ய ஸத்கீர்த்திம் ஸ்மரந்தி ஸுசிரம் ஜநா:"

அநாதியான இந்த ஸம்ஸார மண்டலத்தில் பிறந்தவர்களும் இறந்தவர்களும் எண்ணிறந்தவர்கள். "தோன்றில் புகழொடு தோன்றுக" என்ற திருக்குறளின்படி யசஸ்விகளாய்த் தோன்றினவர்களும் இல்லாமற் போகவில்லை. அன்னவர்களில் எனது அஸக்ருத் ஸ்மரணத்திற்கு இலக்கானவர்களும் வைகுண்டவாஸிகளுமான தொண்ணூறு மஹநீயர்களை இங்குக் குறிப்பிடுகிறேன், தொண்ணூருவது பிராயப்பூர்த்தியின் நினைவுக்குறுப்பாக. பிறகு அடுத்த ஸஞ்சிகையில் இவர்களின்

பெருமைகளைச் சுருக்கமாக வெளியிடுவேன் அடியேனுடைய அஸக்ருத் ஸ்மரணத்திலிருக்கும் பெரியார்கள் பல நூற்றுக்கணக்கில் தேறுவர்கள். ப்ரக்ருதம் தொண்ணூறு பெரியார்களை மட்டும் குறிப்பிடுகிறேன்.

— காஞ்சீபுரம் —

1 அண்ணாரங்காசாரியர் (தந்தை)
2 (மாதாமஹர்) ஜீயர்ஸ்வாமி (ஷஷ்டி ஜீயர்)
3 ஸ்ரீகாதி ஜகத்குரு ஸ்வாமி
4 பட்டரை ஸ்ரீநிவாஸவரதாசாரியர்
5 ஆசாரி கிருஷ்ணமாசாரியர்
6 தாமல் விஜயராகவாசாரியர்
7 ராமசந்த்ராசார் (மாத்வர்)
8 வித்யாதீசாசார் (மாத்வர்)
9 இளங்காடு ரங்காசாரியர்
10 வேங்கடார்யன் (ஆங்கிலம் கற்பித்தவர்)
11 புதுப்பேர் வேங்கடாசாரியர் (பிறகு ஜீயரானவர்)
12 மாம்பள்ளம் ஸுதர்சநாசார்ய ஸ்வாமி
13 விரக்தி பாஷ்யகாராசார்யர் ,,
14 ஜடப்ரோல் வாதிகேஸரி
15 ஷஷ்டி திருவேங்கடாசாரியர்
16 தன்றி பட்டப்பா தாதாசாரியர்
17 தன்றி வேங்கடவரததாதாசாரி
18 குன்றபாக்கம் வித்வத்ஸார்வபௌம சீமாச்சாரியர் ஸ்வாமி
19 ஷஷ்டி ஸ்ரீநிவாஸவரதாசாரியர் ,,
20 புரிசை கிருஷ்ணமாசாரியர் ,,
21 ஈச்சம்பாடி ராமானுஜாசார்ய ஸ்வாமி
22 ஈச்சம்பாடி திருமலாசாரியர்
23 ஈச்சம்பாடி வரதாசார்ய ஸ்வாமி
24 ஈச்சம்பாடி சடகோபாசார்யர்
25 விஞ்சிமூர் ஸ்ரீநிவாஸாசாரியர்
26 (குமாரர்) சிங்கராசாரியர்
27 விஞ்சிமூர் பாஷ்யமையங்கார்
28 ஸ்ரீ பாஞ்சராத்ரம் ராஜம்பட்டர்
29 தாயார் ஸன்னிதி வரதாசாரியர்
30 உத்திரமேரூ கனபாடி ராகவாசார்

— ஸ்ரீபெரும்பூதூர் —

31 ஆஸூரி பெரிய ராமானுஜாசாரியர் ஸ்வாமி
32 ஆஸூரி சின்ன ராமானுஜாசாரியர்
33 வேதவாத்யார் கிருஷ்ணமாசாரியர்
34 மணவாள ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி
35 தெட்டு தாதாசாரியர்
36 (தம்பி) தெட்டு திருமலாசாரியர்
37 கற்பூரம் பட்டப்பா வெங்கடாசார்
38 அஷ்டகோத்ரம் ராமானுஜாசார்
39 (குமாரர்) பார்த்தஸாரதி (திருமழிசை)
40 புத்தாம் வரதாசார்யஸ்வாமி
41 தாதப்பங்கார்ஸ்வாமி
42 அய்யன் ராமானுஜாசார்ய ,,
43 ராய்ஜீ ஸ்ரீநிவாஸாசார்

— திருநாங்கூர் —

44 ப்ர. பெரிய கிருஷ்ணமாசாரியர்
45 ப்ர. சின்ன கிருஷ்ணமாசாரியர்
46 கபிஸ்தலம் அனந்தாசாரியர்

— திருமலை திருப்பதி —

47 வித்வத்ஸார்வபௌம ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமி
48 ப்ர. அண்ணா ஸ்ரீரங்காசாரியர்
49. கிடாம்பி அப்பா அண்ணங்காராசாரியர் ஸ்வாமி
50 கபிஸ்தலம் தேசிகாசாரியர் ,,

ஸ்ரீரங்கம்

51 பத்தராவி ஸ்வாமி

52 காரப்பங்காடு சிங்கப்பெருமாள்
53 மெய்யுவையங்கார் ,,
54 திருக்குமாரர் ஸௌந்தரராஜாசார்
55 ஸ்ரீஸூக்தி ரத்நாகரம் இளைய
வில்லி சடகோபாசாரியர் ,,
56 எம்பார் க்ருஷ்ணமாசார்யர் ,,
57 கு. சிங்கமையங்கார் ,,
58 புத்தூர் க்ருஷ்ணய்யங்கார் ,,

திருநாராயணபுரம்

59 அனந்தாண்பிள்ளை
எம்பெருமானார் ஸ்வாமி
60 அக்காரக்கனி ராமாநுஜாசார்யர் ,,
61 பண்டிதரத்னம் குப்பண்ணு
ஸ்வாமி
62 கோவிந்தப்பங்கார் ஸ்வாமி
(ஜீயர்)
63 ஸ்ரீரங்கம் ஸம்பத் ஸ்வாமி
64 மண்டயம் ஆழ்வார் ஸ்வாமி
65 ,, (குமாரர் திருமலை ஐயங்கார்
66 மைஸூர் கஸ்தூரி ரங்காசார்ய
ஸ்வாமி
67 தேவசிகாமணி ராமாநுஜாசார்ய
ஸ்வாமி

ஸ்ரீ வில்லிபுத்தூர்

68 விஞ்சிமூர் ஆழ்வார் ஸ்வாமி
69 மேலை வாத்யார் திருமலை
ஐயங்கார்

திருக்கோட்டியூர்

70 ஸ்தானீகம் தங்கமையங்கார்
71 ஸௌம்ய நாராயணாசார்ய ,,
72 தம்பி ஸ்ரீராமதேசிகாசார்ய ,,
73 உப்பிலியப்பன் நவநீதம்
க்ருஷ்ணமாசார்யர் ,,

திருவல்லிக்கேணி-சென்னைமாநகர்

74 அத்தங்கி கவிபூஷணம் ஸ்வாமி
75 அ. வீ நரஸிம்ஹாசாரியர்
76 அ. மு. ஸ்ரீநிவாஸாசாரியர்
77 வை. மு. சடகோப ராமாநுஜா
சாரியர் ,,
78 வை. மு. கோபாலக்ருஷ்ணமா
சாரியர் ,,
79 திருக்கண்ணபுரம் பட்டப்பா
ஸ்வாமி
80 காரப்பங்காடு வேங்கடாசார்ய
ஸ்வாமி
81 அட்வகேட் T. ரங்காசாரியர் ,,
82 ,, கீனூர் நரஸிம்ஹா
சாரியர் ,,
83 ஸர். S வாதாசாரியர் ,,
84 மஹர்ஷி. லாஸூதேவாசாரியர்
85 தாக்ஷிணாத்ய கலாநிதி
சாமிநாதையர்
86 விஜ்ஞானசிந்தாமணி
நீலகண்ட சர்மா
87 ஸம்ஸ்க்ருத சந்த்ரிகா அப்பா
சர்மா
88 விசக்ஷண தொட்டயாசார்
89 ஆர்யதர்மம் அ. கோபாலதேசிக
90. ,, திருக்குடந்தை
பார்த்தஸாரதி

---

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகா
சார்யர்களான
வானமாமலை சின்ன கலியன்
ஸ்வாமி
வானமாமலை சின்ன ராமாநுஜஜீயர்
ஸ்வாமி
திருக்குறுங்குடி பெரியஸ்வாமி
திருக்குறுங்குடி பேரருளாளஜீயர்
ஸ்வாமி
ஆழ்வார் திருநகரி அப்பன்ஜீயர்
ஸ்வாமி
ஸ்ரீரங்கநாராயணஜீயர்தேசிஸ்வாமி
தேரழுந்தூராண்டவன்
இஞ்சிமேட்டழகியசிங்கர்
அபிநவரங்கநாத பரகால ஸ்வாமி
(திருநாராயணபுரம்)
யதுகிரி யதிராஜ ஜீயர் ஸ்வாமி.

# நாச்சியார் திருமொழியில் ஒரு அனுபவம்

நாச்சியார் திருமொழியில் *கோழியழைப்பதன் முன்னம்* *மற்றிருந்தீர்கட்கு *கண்ணனென்னும் கருந்தெய்வம் *பட்டிமேய்ந்தோர் காரேறு' என்னும் நான்கு பதிகங்கள் பேரின்பவெள்ளம் பெருகும். அவற்றுள் ஒரு பதிகத்தின் அனுபவம்.

கண்ணனென்னும் கருந்தெய்வம். கீழ்ப்பதிகத்தில் எ இப்போதே கண்ணபிரானுள்ள ஏதாவதோரிடத்திலே கொ போய்ச் சேர்த்துவிடுங்களென்று வேண்டப்பட்ட உறவினர் 'அந்தோ! கண்ணபிரான் என்றைக்கோ அவதார க்ருத்யங்களை முடித்துக்கொண்டு தன்னடிச் சோதிக்குச் சென்று சேர்ந்தானே; இப்போது மதுரையிலாவது திருவாய்ப்பாடியிலாவது யமுனையிலாவது என்ன இருக்கிறது!, அங்கே இவளைக்கொண்டு சேர்ப்பதனாலென்ன பயனாகும்? இவ்வுண்மையை வெளியிட்டாலோ இவளுடைய துயரம் இன்னும் அதிகரிக்குமேயல்லது இறையும் குறையமாட்டாது; ஆக வேறொரு வழியிலே இவளைத் தேற்றவேணுமத்தனை' என்றெண் 'அம்மா கோதாய்! இப்போது கார்காலமன்றோ; எங்கும் புறப்படலாகாது காண்; சிறிது தாமதம் பொறுத்துக்கொள்; பிறகு அவ்விடம் அழைத்துச் செல்வோம்; அதுகாறும் கோவிந்தன் குணம்பாடி ...வி னாத்திரு! மேலும் பெண் பிறந்தார்க்கு இத்தனை பதற்றம் தக... என்று ஹிதமாகச் சொன்னார்கள். அது கேட்ட கோதை 'என்னை நீங்கள் அங்குக் கொண்டு செல்ல மாட்டிற்றிலீர்களாகில் அவனிடமிருந்தாவது ஏதாவதொரு ப்ரஸாதத்தைக் கொணர்ந்து எனக்குத் தந்து என்னைப் பிழைப்பூட்டுங்கள்; பெண்ணின் வருத்தமறியாத பெருமானுடைய திருவரையில் சாத்தின பீதக வாடையைக் கொண்டுவந்து என் வாட்டந்தணிய வீசுங்கள்; அவனது திருத்துழாயைக்கொணர்ந்து எனது குழலில் சூட்டுங்கள்; அவன் திருமார்பிலணிந்த வனமாலையை கொணர்ந்து எனது மார்பில் புரட்டுங்கள்; அவ்வாராவமுதப் பெருமானுடைய அமுதவாயிலூறிய நீரைக் கொணர்ந்து என் வாயில் கொட்டுங்கள்; அத்திருமால் ஊதிவருகின்ற குழலின் துளையில் கொழித்தெழுந்த அமுதப் புனலைக் கொணர்ந்து எனது முகத்தே தடவுங்கள்; அப்பெருமான் நடந்து செல்லும் வழியிலுள்ள பொடியைக்கொணர்ந்து என்னுடம்பிலே பூசுங்கள் என்றிப்படி பலவுஞ் சொல்லி ஒருவாறு தன்னாற்றாமையைத் தீர்த்துக்கொள்ள வழி தேடுகிறாளிப்பதிகத்தில்.

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்

1 நாலாயிர திவ்யப்ரபந்த வுரைகள்
2 பூர்வாசார்ய தமிழ்ப்ரபந்த ,,
3 ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4 ஆழ்வாராசார்யப்ரபாவ நூல்கள்
5 இதிஹாஸ புராண சரித்ர ,,
6 ரஹஸ்யார்த்த விளக்க ,,
7 வேதாந்தப் பொருள் விளக்க ,,
8 ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9 வேதவிசாரலக்ஷண நூல்கள்
10 லோகாபிராம உபந்யாஸ ,,
11 பரபக்ஷப்ரதிக்ஷேப ,,
12 உபந்யாஸக ஸௌபாக்ய ,,
13 வடமொழி நூல் திரள்கள்
14 ஹிந்தி பாஷையில் நூல்கள்
15 தெலுங்கு பாஷையில் ,,
16 பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாபணம் M. O. செய்பவர்கள்:-

P. B. ANNANGARACHARYA.
Editor, Granthamala, Kanchipuram-631503.
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un delivered please return to:
P. B. ANNANGARACHARYA.
Kanchipuram. Pin Code-631503.

iman

Released by Maran's Dog ,Toronto, Canada

424... Sri G. CHANDRASEKHARAN,
B.E.,
224, Valayakkara Street,
ERODE 638

*Edited and Published by P. B. Annangaracharya Swami and Printed by E. Devarajan at Sri Kamakshi Press, No. 44-C, T. K. Nambi St., Kanchipuram 631503.*